அஜீரணத்தைப் போக்கி நல்ல ரத்தத்தை விருத்தி செய்து தசைகளை வளர்த்து தாது புஷ்டி யளிப்பது.

காபூல் கனிகளாலும் இமய மலை மூலிகைகளாலும் தயாரிக்கப்பட்ட டானிக்.

# அம்ருதா

ரத்த சுத்தி திராவகம்

கேசரி குடீரம் லிட. மதராஸ்

தமிழ் நாடு ஏஜண்டுகள் :

சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்

மேலக்கோபுர வீதி : மதுரை

ஸ்ரீ வெங்கடேஸ்வர ஸங்கீத ஸபை — திருச்சி

15-11-44 புதன் (அமாவாசை) மாலை 6-30 மணிக்கு

## திருச்சி முனிஸிபல் பப்ளிக் ஹாலில்

ஸ்ரீமதி என். ஸி.

# வஸந்த கோகிலம்

கோஷ்டியாரின் சங்கீதக் கச்சேரி

டிக்கெட் (வரியுள்பட)

ரூ. 2-8-0, 1-8-0, 1-0-0, 0-8-0

டிக்கெட் கிடைக்குமிடம் :

கான்பூர் ஹவுஸ், 21, சின்னகடை வீதி

இடத்திற்கு முந்துங்கள் !

S. G. Ratnam, Organiser.

ஒலிபெருக்கி ஏற்பாடு :

ஜே. எஸ். ரேடியோ கம்பெனி, திருச்சி

பற்கள் ஆடுகின்றனவா ?

ஆனால் அவைகளுக்கு

# "தைமோஸின்"

சிகிச்சை அளியுங்கள்.

ப்ரோச் பல் வைத்தியர் Dr. C. M. தேசாய், L. D. S. அவர்களின் மருந்து முறைப்படி தயாரித்தது. டூத் பிரஷ் அல்லது விரலினால் சில துளிகள் உபயோகித்தால் போதும். மாயமாக பற்களின் காவியை அகற்றி, சொத்தை விழுவதைத் தடுத்து, பற்களை ஆரோக்யமாயும் வெண்மையாயும் செய்து, பயோரியா, ஈறு சம்பந்தமான வியாதிகள், வாய் வெக்காடு மற்றும், தொண்டை உபாதைகள் இவற்றைத் தடுக்கும்.

2 அவுன்ஸ் புட்டி விலை ரூ. 2.

தபால் பாக்கிங் சார்ஜ் தனி.

டென்டல் இன்ஸ்டிடியூட்

ஸேவா ஆஸ்ரமம், ப்ரோச்.

ஏஜண்டுகள் :

T. M. தாகூர் & கோ.

1-10, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜி.டி. மதராஸ்.

அவற்றை வெளியிடுவதுதான் எழுத்தாளரின் முதல் கடமை.

அரசியலில் ஜனநாயகத்துக்கு அடிப்படையாயிருப்பது அபிப்பிராய உரிமை. சர்வாதிகாரிகள் ஜனநாயகத்தைக் கொல்ல முயற்சிக்கும்போது முதன் முதலில் தாக்குவது அபிப்பிராய உரிமையைத்தான்.

இலக்கிய வளர்ச்சிக்கும் கலை வளர்ச்சிக்கும் மாறுபட்ட அபிப்பிராயங்களை வெளியிடுவதும் சர்ச்சை செய்வதும் இன்றியமையாத சாதனங்களாகும்.

ஆனால் அபிப்பிராய பேதங்களை வெளியிடுவதற்கும், ஆசாமிகளைத் திட்டுவதற்கும் வித்தியாசம் ரொம்ப உண்டு.

அபிப்பிராயங்களையும் கொள்கைகளையும் வன்மையாய்க் கண்டிக்கலாம்; தாக்கலாம். ஆனால், மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டவர்களைத் திட்ட வேண்டியதில்லை. அவர்கள் எழுதுவதெல்லாம் 'குப்பை' என்று சொல்ல வேண்டியதில்லை.

எழுத்தாளர்கள் ஒருவரை யொருவர் பாராட்டிக் கொண்டும், மெச்சிக்கொண்டும், அபிப்பிராய பேதங்களை வன்மையோடு வெளியிடலாம்.

சமீபத்திலே அமெரிக்காவில் தேர்தல் நடந்தது. தேர்தலுக்கு முன்னால் ரூஸ்வெல்ட்டும், டூயியும் ஒருவருக்கொருவர் சக்கைப் போடு போட்டுக் கொண்டார்கள். தேர்தல் முடிந்ததும் என்ன ஆயிற்று? வெற்றி பெற்ற ரூஸ்வெல்ட்டைத் தோல்வி யடைந்த டூயி வாழ்த்துகிறார். டூயிக்கு ரூஸ்வெல்ட் வந்தனத் தந்தி அனுப்புகிறார்.

இத்தகைய சமூகப் பான்மைதான் எழுத்தாளர் உலகத்திலும் தேவையாகும். "எழுத்தாளர் ஒற்றுமை" என்னும்போது, மேற்கண்ட சமூகப் பான்மையைத்தான் குறிப்பிடுகிறோம்.

## வாழ்க எழுத்தாளர்!

அபிப்பிராய பேதங்கள் ஒரு புறம் இருக்க, எழுத்தாளர்கள் அபிப்பிராய பேதமின்றி ஒற்றுமையாகச் செய்யக் கூடிய காரியங்களும் இல்லாமற் போகவில்லை.

உதாரணமாக, "தமிழ் டாக்கிகள் வரவர ஆபாசக் களஞ்சியங்களாகி வருகின்றன; அவற்றைத் தூய்மைப் படுத்த வேண்டும்" என்று எழுத்தாளர்கள் ஏகமனதாக அபிப்பிராயப் படலாம். அவர்கள் இதற்காக ஒற்றுமையாக முயற்சி எடுத்தார்களானால் மகத்தான வெற்றியை யடையலாம். நாட்டுக்கு நன்மையான ஒரு பெரிய காரியத்தைப் பொறுமையினால் சாதித்த பெருமை அவர்களைச் சேரும்.

"எழுத்தாளர்தான் சமுதாயத்தின் தர்ம கர்த்தர்கள். சமுதாயத்தின் முன்னேற்றத்திலேயே அவர்கள் சிந்தனை இருக்க வேண்டும். புதிது புதிதாகக் கிளம்பும் தீமைகளுக்குப் பரிகாரம் கண்டு பிடிக்க வேண்டியது அவர்களுடைய வேலை."

என்று ஸ்ரீ சொக்கலிங்கம் அழுத்தமாகச் சொல்லி யிருக்கிறார். அத்தகைய வேலைகளில் எழுத்தாளர் ஒற்றுமையாக ஏகோபித்து ஈடுபடுவதற்கு இடமிருக்கத்தான் செய்கிறது.

சமுதாய நன்மைக்கு அவசியமான பொதுக் காரியங்களோடு, எழுத்தாளர்கள் தங்கள் சொந்த உரிமைகளையும் நலன்களையும் பாதுகாத்துக் கொள்வதற்காகவும் ஒற்றுமையான பிரயத்தனங்கள் செய்யலாம்.

சமுதாயத்தின் தர்மகர்த்தர்கள், முதலில் தங்கள் வீட்டில் தரித்திரம் குடிபுகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் தர்ம கர்த்தர் பொறுப்பை அவர்கள் சரிவர நிர்வகிக்க முடியும். அப்போதுதான் அபிப்பிராய பேதங்களைப் பற்றிச் சர்ச்சை நேரும்போது, ஆள்களைத் தாக்காமலும் நேர்மையாகவும் எழுதுவது சாத்தியமாகும். வீட்டிலே தரித்திரம் இருந்தால், மனதிலே கசப்பு உண்டாவது மனித இயல்பு. மனதில் கசப்புக்கு இடங் கொடுத்து விட்டால், அப்புறம் அபிப்பிராயங்களைக் கண்டிப்பதற்கும் மனுஷ்யர்களைத் தாக்குவதற்கும் உள்ள வித்தியாசம் மறந்து போய் விடுவதும் இயல்பல்லவா!

ஆகவே, மகாநாட்டுத் தலைவரின் யோசனைகளை ஒட்டி, எழுத்தாளர் சங்கம் ஒன்றை அமைக்கவும், எழுத்தாளர்கள் எல்லாருக்கும் ஒரு கூட்டு இன்ஷ்யூரன்ஸ் திட்டம் வகுக்கவும் செய்திருக்கும் தீர்மானங்களை நாம் முழு மனதுடன் ஆதரிக்கிறோம்.

மொத்தத்தில், கோயமுத்தூரில் கூடிய தமிழ் எழுத்தாளர் மகாநாடானது தமிழ் எழுத்து உலகின் ஒரு புதிய சகாப்தத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறது. இந்தப் புதிய சகாப்தத்தில் பல அரும் பெரும் காரியங்கள் நடைபெறப் போகின்றன, தமிழ் மொழி பல துறைகளிலும் மகோந்நதத்தை அடையப் போகிறது என்னும் பூரண நம்பிக்கையுடன் "வாழ்க எழுத்தாளர்!" என்று வாழ்த்துகிறோம்.

---

ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான "அதிர்ஷ்டசாலி!" என்னும் கதை ஜோடித் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எஸ். ஹேமலதா, நியூ டெல்லி.

இப்படி வேற்றுமை கற்பித்தது கொள்கை யளவிலும் பிசகு, காரியாம்சத்திலும் பெரும் பிசகு என்று சொல்ல வேண்டியதில்லை.

இந்திய நாட்டில் ஆங்கில ஆட்சி ஏற்பட்டதின் பயனாக ஆங்கில பாஷைக்கும் பொய்க் கௌரவம் ஏற்பட்டு, தேச பாஷைகள் கீழே போய்க் கொண்டிருந்தன. ஆங்கில பாஷையின் பொய்க் கௌரவத்தை அடித்து வீழ்த்துவதற்கு தேசப் பெரியோர்கள் பலர் எவ்வளவோ பெரும் பிரயத்தனங்கள் செய்ய வேண்டியிருந்தது. கடைசியாக, அந்தப் பிரயத்தனத்தில் பெரிதும் வெற்றி ஏற்பட்டிருக்கிறது.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில், ஆங்கில பாஷையை உயர்த்தித் தேச பாஷைகளைத் தாழ்த்தும் தீர்மானம் செய்தது பெரும் பிசகு என்பதோடு, தேசிய கௌரவத்துக்கே பங்கம் விளைப்பதாகும்.

அதற்கு ஏதாவது அவசியம் உண்டா என்று பார்த்தால், அதுவும் தற்சமயம் இல்லை யென்று நிச்சயமாய்ச் சொல்லலாம். ஒரு வேளை பத்து வருஷத்துக்கு முன்பு, தேச பாஷைப் பத்திரிகைகள் பொருளாதாரக் கஷ்டங்களுக்கு உள்ளாகி யிருந்த காலத்தில் அது அவசியமா யிருந்திருக்கலாம். இப்போதோ, ஆங்கில பாஷையின் ஆட்சி குன்றி தேச பாஷைகளின் ஆதிக்யம் ஓங்கி யிருக்கிறது. தேச பாஷைப் பத்திரிகைகளைப் பொது மக்கள் அதிகமாக விரும்பி ஆதரிப்பதால், பொருளாதாரக் கஷ்டங்கள் நீங்கிச் சிறப்பாக நடைபெறுகின்றன. வெகு சீக்கிரத்தில் ஆங்கில பாஷைப் பத்திரிகைகளின் ஆதிக்யம் அடியோடு மங்கும் என்பதற்கு அறிகுறிகள் காணப்படுகின்றன. ஆங்கிலம் அறிந்தவர்கள் கூட தினசரிச் செய்திகளைத் தமிழ்ப் பத்திரிகைகளிலேயே படிக்கும் காலம் விரைவில் ஏற்படுமென்று தோன்றுகிறது.

இந்த நிலைமையில், தமிழ் முதலிய தேச பாஷைப் பத்திரிகைகளுக்குத் திறமை வாய்ந்த உதவி ஆசிரியர்கள் தேவையா யிருக்கும். அவர்களுக்குச் சம்பளமும் அதிகமாகக் கொடுத்துத் தான் ஆகவேண்டும். கொடுப்பதற்கு வசதி இல்லாமல் போகவில்லை.

பின், எதற்காக மேற்படி சம்பள வேற்றுமை காட்ட வேண்டும்?

தமிழுக்காகவும், தமிழின் கௌரவத்துக்காகவுமே உயிர் வாழ்ந்து வருகிறவரான ஸ்ரீ வ. ரா. மேற்படி சம்பள வேற்றுமைச் சிபார்சைப் பெரும் அவமானமாகக் கருதியதில் சிறிதும் வியப்பில்லை. அவருடைய திறப்புப் பிரசங்கத்தில் தம்முடைய வன்மை முழுவதையும் கொண்டு அந்த சிபார்சைக் கண்டித்துத் தண்டித்திருக்கிறார். சிபார்சு செய்தவர்களுக்கு "நன்றாய் வேண்டும்" என்றுதான் நாமும் கருதுகிறோம்.

ஸ்ரீ வ. ரா. வின் கருத்தை யொட்டி மேற்படி சிபார்சைக் கண்டித்தும், சிபார்சு செய்தவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தியும் மகாநாடு தீர்மானம் செய்திருக்கிறது. ரொம்ப சரி! ரொம்ப ரொம்ப சரி!

## எத்தகைய ஒற்றுமை?

தமிழ் எழுத்தாளர் மகாநாட்டுக்கு ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கத்தைத் தலைவராக எடுத்தது எவ்வளவு பொருத்தமான விஷயம் என்று முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம்.

ஸ்ரீ சொக்கலிங்கம் தமது அருமையான பிரசங்கத்தில், "எழுத்தாளர் ஒற்றுமை"யைக் குறித்து முக்கியமாகப் பிரஸ்தாபித்திருக்கிறார்.

"எழுத்தாளர் ஒற்றுமை" என்று நாம் பேசும்போதும் எழுதும்போதும், எத்தகைய ஒற்றுமையைக் குறிப்பிடுகிறோம் என்பதை எழுத்தாளர், பொது மக்கள் எல்லாருமே நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

"எழுத்தாளர் ஒற்றுமை" என்றால், எந்த விஷயத்திலும் எழுத்தாளர்கள் ஒரே வித ஒற்றுமையான அபிப்பிராயத்தை வெளியிட வேண்டும் என்பதில்லை.

அப்படியானால் ஸ்ரீ சொக்கலிங்கம் சொல்லியிருப்பதுபோல், பல பத்திரிகைகளும் பல எழுத்தாளரும் வேண்டியதில்லை. ஒரே பத்திரிகையும் ஒரே எழுத்தாளரும் இருந்தால் போதும்.

கடவுளுடைய சிருஷ்டியில் எந்தப் பொருளுக்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. எந்த விஷயத்துக்கும் இரண்டு பட்சங்கள் உண்டு. ஒவ்வொரு விஷயத்தையும் பற்றி இரண்டு பட்சங்களையும் ஆராய்ந்து பார்த்தால்தான் உண்மை வெளியாகும்; அதுவே அறிவு வளர்ச்சிக்குச் சாதனமாகும்.

அரசியல், சமூகம், இலக்கியம், கலை முதலிய துறைகளில் அபிப்பிராய பேதங்கள் இருக்கத்தான் செய்யும்.

வியாதி பழைய வியாதி; உலகம் எங்கும் பரவி யிருக்கும் வியாதிதான். அதனால் அது உடம்புக்கு நல்லதென்று ஏற்படாது. ரொம்பக் கெடுதல் என்பதில் சந்தேகமில்லை. முக்கியமாக, தற்காலத்தில் இந்த வியாதி ரொம்பவும் கெடுதல்களை உண்டாக்கி யிருக்கிறது.

தமிழ் நாட்டில் எழுத்தறிவும் பத்திரிகை-புத்தகம் படிக்கும் வழக்கமும் ஒரு பக்கம் பரவி வருகையில், எழுத்தாளர்களுக்குள் அவ்வப்போது நடக்கும் பேனாமுனைப் போர்களும், வசைமொழிப் பிரயோகங்களும் பொதுஜனங்களுக்குள்ளே பெரிதும் மனக் கலக்கத்தை அளித்து வந்திருக்கின்றன. "நமக்கெல்லாம் அறிவு புகட்ட முன் வந்திருக்கும் இந்தப் பிரமுகர்கள் இப்படி வசை புராணம் பாடிக் கொண்டிருக்கிறார்களே! இவர்களுக்கல்லவா முதலில் யாராவது புத்தி புகட்ட வேண்டும் போலிருக்கிறது!" என்று வாசகர்கள் நினைத்திருக்கிறார்கள்.

எழுத்தாளர் காய்ச்சல் என்னும் நோயை நாட்டை விட்டுத் துரத்தவும் எழுத்தாளர்களுக்குள் ஒற்றுமையை உண்டு பண்ணவும், எழுத்தாளரின் நலன்களையும் உரிமைகளையும் பாதுகாக்கவும் அவ்வப்போது சென்னையில் சில முயற்சிகள் நடந்திருக்கின்றன. அவையெல்லாம் உருப்படியான பலனை அளிக்கவில்லை.

## கோவை மகாநாடு

இத்தகைய நிலைமையில் நாளது 1944-ம் வருஷத்தில் கோயமுத்தூர் எழுத்தாளர் சிலர் மேற்படி ஒற்றுமை முயற்சியைத் தொடங்கினார்கள். கோயமுத்தூரில் தமிழ் எழுத்தாளர் மகாநாட்டைக் கூட்டி விடுவதென்று அவர்கள் தீர்மானித்தார்கள். அதற்காகச் சென்னைக்குப் படை யெடுத்து வந்தார்கள். எவ்வளவோ இடையூறுகளை யெல்லாம் பொருட்படுத்தாமல் பிடிவாதமாய் நின்றார்கள். பல முறை மகாநாட்டைத் தள்ளிப் போட்டார்கள். பல முறை சென்னைக்கு வந்து திரும்பினார்கள். கடைசியில் விடாப் பிடியாக மகாநாட்டை நடத்தியே தீர்த்தார்கள்.

அதுவும் சாதாரணமாய் நடத்தவில்லை. பிரமாதமான வரவேற்புகள், உபசாரங்கள், ஊர்வலங்கள், விருந்துகள் ஆகிய விமரிசைகளுடன் வெகு சிறப்பாக நடத்தினார்கள்.

கோயமுத்தூர் எழுத்தாளர்களுக்கும், முக்கியமாக "வீர சக்தி" "வஸந்தம்" ஆசிரியர்களுக்கும் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைக் கூறுகிறோம். "வீர சக்தி"யின் தீரப் பிடிவாதமும், "வஸந்த"த்தின் நறுமண இனிமையும் சேர்ந்து, அசாத்தியம் என்று கருதப்பட்ட காரியத்தைச் சாத்தியமாகச் செய்து விட்டன.

## வ. ரா. வை வாழ்த்துகிறோம்

கோயமுத்தூரில் மகாநாடு கூடிய போதிலும், அதற்காக நமது வாழ்த்துக்குப் பெரிதும் உரியவராகிறவர், தமிழ் நாட்டின் முதல் எழுத்தாளரான ஸ்ரீ வ. ரா. அவர்கள்தான். பாரதியாருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்றவர் ஸ்ரீ வ. ராமஸ்வாமி ஐயங்கார். அரசியல், சமூகம், இலக்கியம் ஆகிய துறைகளில் பாரதியாரின் கொள்கைகளையே தமது கொள்கைகளாகக் கொண்டவர். தமிழன்பும், 'நான் தமிழன்' என்ற கர்வமும் அவருடைய இரத்தத்தில் ஊறிக் கலந்த விஷயங்கள். தமிழ் எழுத்தாளர்களுக்குள் ஒற்றுமை ஏற்படுத்தும் முயற்சி அடிக்கடி தொடங்குவதற்குக் காரணமானவர் வ. ரா. தான். அவருடைய நீண்டகால மனோரதமே இப்போது கோயமுத்தூர் எழுத்தாளரின் முயற்சியினால் ஒருவாறு நிறைவேறி யிருக்கிறதென்று சொல்ல வேண்டும்.

எனவே, அன்பர் வ. ரா. அவர்களுக்கு மனமார்ந்த வாழ்த்துக் கூறுகிறோம். எழுத்தாளர் மகாநாட்டின் திறப்பாளராக அவரைத் தேர்ந்தெடுத்தது மிகப் பொருத்தம் என்பதில் சந்தேகமில்லை.

## சம்பளப் பிரச்னை

தமிழ் எழுத்தாளர் மகாநாடு முதன் முதலாகக் கூடும் சந்தர்ப்பத்தில், அதற்குக் கொஞ்சம் காரசாரமான பிரச்னை ஒன்றைத் தரவேண்டுமென்பதற்காகவே செய்ததுபோல், அகில இந்தியப் பத்திரிகாசிரியர்—முதலாளிகள் சமீபத்தில் லாகூரில் கூடி ஒரு பொர்லைச் செய்து வைத்தார்கள். அதாவது, பத்திரிகை உதவி ஆசிரியர்களுக்குக் குறைந்த பட்சச் சம்பளத்தைத் தீர்மானிக்கும்போது, ஆங்கிலப் பத்திரிகைகளுக்கும் தேச பாஷைப் பத்திரிகைகளுக்கும் வேற்றுமை கற்பித்து, ஆங்கில உதவி ஆசிரியர்களுக்கு ரூ. 100 என்றும், தேச பாஷை உதவி ஆசிரியர்களுக்கு ரூ. 75 என்றும் தீர்மானித்தார்கள்.

# புதிய சகாப்தம்

சில வருஷங்களுக்கு முன்னால் எந்தக் காரியத்துக்கும் "வடக்கே பாருங்கள்!" என்று சொல்வது தமிழ் நாட்டில் வழக்கமாயிருந்தது! "தேச பக்தியா? வடநாட்டிலேதான் உண்மையான தேச பக்தியைக் காணலாம்; தமிழ் நாட்டிலே வெறும் ஆஷாடபூதிகள்!" என்பார்கள். "தாய் பாஷை அபிமானமா? எல்லாம் வடநாட்டிலேதான்! வங்காளத்தைப் பாருங்கள்! மகாராஷ்டிரத்தைப் பாருங்கள்! ஆந்திர நாட்டையாவது பாருங்கள்! தமிழ் நாட்டிலே தாய் பாஷை அபிமானம் ஏது? தமிழிலேதான் என்ன மண்ணாங்கட்டி இருக்கிறது?" என்பார்கள். இதுமாதிரியே உண்மையான தேசத் தலைவர்கள் வடக்கேதான்! வீர புருஷர்கள் வடக்கேதான்! தியாகிகள் வடக்கேதான்! சங்கீதம், சித்திரம், நாடகம் நடனம் முதலிய கலைகள் வடக்கேதான்! தீவிர தேசியப் பத்திரிகைகள் வடக்கேதான்! — தமிழ் நாட்டில் ஒன்றுமே இல்லை! இங்கே இருப்பது வெறும் வரட்டு ஊளை, அழுகை, சுயநலம், துவேஷம், மண்ணாங்கட்டி, தெருப் புழுதி இவ்வளவேதான்!

## "எங்கள் தமிழ்நாடு!"

மேற்கண்டவாறெல்லாம் தமிழர்களே தமிழ் நாட்டைத் தாழ்த்திச் சொல்லிக் கொண்டிருந்த காலம் மலையேறி, "எங்கள் தமிழ் நாடு" என்றும், "எங்கள் தமிழ் மொழி" என்றும், "நாங்கள் தமிழர்கள்" என்றும் மார் தட்டிக் கொண்டு சொல்லும் காலம் இப்போது வந்திருக்கிறது.

இந்தப் புதிய தமிழ் சகாப்தத்துக்கு ஆதிகாரணமானவர் பாரதியார் என்பதைப் பற்றி அபிப்பிராய பேதமே இருக்க முடியாது. அவருடைய தெய்விகப் பாடல்கள் தமிழர்களுக்கு அத்தகைய சக்தியையும் சுய நம்பிக்கையையும் அளித்தன. பாரதியார் பாடல்களின் மகிமை அவருடைய காலத்துக்குப் பிறகுதான் நன்கு பயனளிக்க ஆரம்பித்தன. சென்ற இருபது வருஷ காலத்தில் தமிழ் நாட்டில் அரசியல், இலக்கியம், கலை ஆகிய எல்லா வாழ்வுத் துறையிலும் அதி தீவிர அபிவிருத்தி ஏற்பட்டது. எல்லாவற்றிலும் அதிகமாக வசன இலக்கியத் துறையில் முன்னேற்றம் காணப்பட்டது.

1921-ம் வருஷத்துக்கு முன்னால் நல்ல முறையில் தமிழ் வசன நடை எழுதியவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். சென்ற இருபது வருஷங்களிலோ, தமிழ் எழுத்தாளர்கள் — நல்ல வசன நடை எழுதுகிறவர்கள் — நூற்றுக் கணக்கில் ஏற்பட்டு விட்டார்கள்.

வட நாட்டைச் சேர்ந்த வேறு எந்த மாகாணத்தைக் காட்டிலும் தற்சமயம் தமிழ் நாட்டிலேதான் ஏராளமான கதைகளும், கட்டுரைகளும் எழுதப்படுகின்றன. பத்திரிகைகள்—சஞ்சிகைகளின் வளர்ச்சி அபரிமிதமாக ஏற்பட்டிருக்கிறது. புத்தகப் பிரசுரமும் அபார வளர்ச்சி அடைந்திருக்கிறது. இந்திய தேசத்திலுள்ள வேறு எந்தப் பத்து ஜில்லாக்களைக் காட்டிலும் தமிழ் நாட்டிலுள்ள பத்து ஜில்லாக்களிலே தான் இன்று பத்திரிகை — புத்தகம் படிப்போர் அதிகமாயிருக்கிறார்கள்.

## எழுத்தாளர் ஒற்றுமை

இவ்விதம் எழுத்தும் எழுத்தாளர்களும், பத்திரிகைகளும் புத்தகங்களும் தமிழகத்தில் பெருகிக் கொண்டிருக்கும் போது, எழுத்தாளர்கள் — பத்திரிகைக்காரர்களுக்குள்ளே அர்த்தமில்லாத வேற்றுமைகளும் காரணமற்ற பூசல்களும் வளர்ந்துகொண்டிருந்தன. ஒரு விதத்தில் இது இயற்கை என்றுதான் சொல்ல வேண்டும். மலேரியாக் காய்ச்சல், டைபாய்டு காய்ச்சல், பங்காளிக் காய்ச்சல் என்பவற்றைப் போல் "எழுத்தாளிக் காய்ச்சல்" என்பதும் ஒருவித வியாதி. இந்த வியாதி இன்றைக்கு ஏற்பட்டதல்ல; தமிழ் நாட்டுக்கு மட்டும் உரியதுமல்ல. மேனாடு, வடநாடு ஆகிய எல்லா நாடுகளிலும் எழுத்தாளிக் காய்ச்சல் ஒவ்வொரு சமயம் பரவியிருந்ததுண்டு. தமிழ் நாட்டில் கம்பர்—ஒட்டக்கூத்தர் காலத்திலேயே அந்த வியாதி இருந்துதான் இருக்கிறது. (கம்பனும் ஒட்டக்கூத்தரும் ஒரு காலத்தவர் அல்ல என்றாலும், அவர்கள் இரண்டு பேரையும் பிணைத்துக் கதை கட்டப்பட்டதிலிருந்தே நாட்டில் அந்த வியாதி இருந்திருக்கிறதென்று ஊகிக்கலாம்.)

## நிகழ்ச்சிச் சித்திரம்

-உம்மன்

"நாம் ஈனஸ்திதியில் இருந்தாலும் நம் நாட்டின் மானத்தைக் காப்பாற்றுவதென்று கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறோம்" என்கிறார் டாக்டர் கரே.

பதில் நடவடிக்கை

தென்னாப்பிரிக்க வெள்ளையரின் நிறத் திமிர்.





ஸ்ரீமதி என்.ஸி. வஸந்தகோகிலம் பாடிய

ராயல் டாக்கீஸ்

# ஹரிதாஸ்

பாட்டுகள்

ஹெச்.எம்.வி



## ஊசிகளின் புதிய விலைகள்

"எச். எம். வி." ஹைபிடெலிடி
10 ஊசிகளடங்கிய பாக்கெட் 1-க்கு ரூ. 1/8

"எச். எம். வி." எஃகு ஊசிகள்
200 ஊசிகளடங்கிய பெட்டி 1-க்கு ரூ. 1/8

"ட்வின்" எஃகு ஊசிகள்
200 ஊசிகளடங்கிய பெட்டி 1-க்கு ரூ. -/14

எல்லா "எச். எம். வி. கிராமபோன் வியாபாரிகளிடமும் ரிகார்டுகள் கிடைக்கும்.

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

சிறந்த சங்கீதம் :: சீரிய ஒலிப்பதிவு



# கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 15

# என்ன சேதி?

## இன்னும் சிறை

நாளது நவம்பர் மீ 14உ [பண்டித ஜவாஹர்லால்ஜியின் பிறந்த தினம். பாரதத் தாயின் இந்தத் தவப் புதல்வர் எத்தனையோ பிறந்த தினங்களைச் சிறைக்குள்ளே கொண்டாடி விட்டார். இந்தப் பிறந்த தினத்திலும் சிறைக்குள்ளேதானிருக்கிறார்! இந்தக் காட்சியைப் பாரத நாட்டில் பிறந்த நாற்பது கோடி மக்களும் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம்!

## எதிர்பார்த்தது

அமெரிக்காவின் பிரஸிடெண்டாக ஸ்ரீ ரூஸ்வெல்ட் நாலாவது தடவை தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். இது நாம் எதிர்பார்த்த செய்திதான். ஆகையால், வியப்பு ஒன்றும் அடையவில்லை. ஆங்கில பாஷை பேசும் ஆங்கிலோ ஸாக்ஸன் ஜாதியாருக்குத் தங்கள் தலைவர்களை எப்போது மாற்ற வேண்டுமென்கிற விஷயம் வெகு நன்றாகத் தெரியும். பாதிக் கடல் தாக்கும்போது, கப்பல் தலைவனை அப்புறப்படுத்த மாட்டார்கள். யுத்தம் வெற்றிகரமாய் முடிந்த பிறகு, ரூஸ்வெல்ட் உலகத்துக்கு அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றுவதில் சங்கடம் ஏற்பட்டால், அப்போதுதான் அவரைத் தள்ளிவிட்டு இன்னொருவரைத் தலைவராக்குவார்கள். "பழைய பிரஸிடெண்டின் அசட்டுத்தனங்களுக்கு நான் பொறுப்பாளியில்லை!" என்று புதிய பிரஸிடெண்ட் சொல்லி விடலாமல்லவா? இதைத் தவிர, பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் எப்போது நம்முடைய "கல்கி" காரியாலயத்துக்கு விஜயம் செய்து விட்டுப் போயிருக்கிறாரோ, அப்போது அவருடைய வெற்றி நிச்சயம் என்றும் ஏற்பட்டு விட்டது. ரூஸ்வெல்ட் தோற்றுத் தமக்கு ஜயம் கிடைக்கும் என்று போட்டியிட்ட டூவி கூட எதிர்பார்த்திருக்க மாட்டார். எனவே, மேற்படி வெற்றியைப் பற்றித் தடபுடல் செய்வதில் அர்த்தம் என்ன?

## பெர்லினில் செங்கொடி!

ருஷியப் புரட்சியின் 27-வது ஆண்டு நிறைவைச் சென்ற வாரத்தில் ருஷியாவில் கொண்டாடினார்கள். இது வரை மேற்படி புரட்சி தினத்துக்கு வாழ்த்து அனுப்பாத சர்ச்சில் துரைகூட இந்தத் தடவை வாழ்த்து அனுப்பினாராம்! இதிலிருந்து தோழர் ஸ்டாலின் எத்தகைய அரும்பெரும் காரியங்களைச் சாதித்திருக்கிறார் என்பதை நன்கறியலாம். இரண்டு வருஷத்துக்கு முன்பு ருஷியாவில் ஒரு பெரும் பகுதி நாஜிகளின் கையில் அகப்பட்டிருந்தது. இந்த வருஷத்திலோ ருஷியாவில் ஒரு அங்குலம் கூட ஜெர்மானியரிடம் இல்லை. இதோடு நமது தோழர் திருப்தியடைந்ததாகவும் தோன்றவில்லை. "பெர்லினிலே நமது செங்கொடி பறக்கும்!" என்று வாக்குறுதி கூறினார். அவர் பெர்லினோடு நிற்க வேண்டுமே, மேலும் முன்னேறாமலிருக்க வேண்டுமே என்றுதான் நமக்குக் கொஞ்சம் கவலையாயிருக்கிறது!





# கல்கி
## பொருளடக்கம்



மலர் 4 இதழ் 15 | 1944 நவம்பர் 12 | தாரண ௵ ஐப்பசி 27



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சங்கீத உலகத்தில் சில சில வித்வான்களைச் சுற்றி கோஷ்டிகள் சேர்ந்து விடுவதைக் காண்கிறோம். இதற்குக் காரணம் அந்த வித்வான்களின் அதிர்ஷ்டம் என்றோ, அவர்களுடைய குணாதிசயம் என்றோ சிலர் நினைப்பதுண்டு. இது தவறு. ஒரு வித்வானைச் சுற்றி கோஷ்டி சேர்ந்தால், அவர் சங்கீதத்தில் ஒரு புதிய பாணியை உண்டுபண்ணுகிறார் என்று எண்ண வேண்டும். அந்தப் பாணி பிடித்துப் போனவர்களுக்கு அது ஒன்றுதான் சங்கீதமாகவும், மற்றதெல்லாம் வெறும் இரைச்சல்-தலைவலி-என்பதாகவும் தோன்றும்.




'கானகலாதரர்' மதுரை மணி ஐயருக்கும் தமிழ் நாட்டில் ஒரு கோஷ்டி ஏற்பட்டிருக்கிறது. இந்த கோஷ்டி அவர் சிறு பிள்ளையாய்ப் பாடத் தொடங்கிய போதே ஏற்பட்டு நாளுக்கு நாள் பெருகி வருகிறது. இன்னமும் அது சின்ன கோஷ்டிதான்; ஆனால் மகா ரஸிகர்கள் அடங்கிய கோஷ்டி.

மதுரை மணி ஐயர் கையாளும் சங்கீத பாணி அவ்வளவு நயமானது; அவ்வளவு உயர்வானது. அதை அநுபவிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். எல்லாருக்கும் எளிதில் கிட்டி விடாது.

கர்நாடக சங்கீதத்தின் உயர்வுக்கு முக்கியமாயிருப்பது ராக ஆலாபன முறை. நமது வித்வான்களில் சிலர் ராக ஆலாபனத்தையே ஸ்வரம் பாடுவது போல் பாடி விடுவதுண்டு. ஆனால் மதுரை மணி ஐயர் ஸ்வரம் பாடுவது கூட ராக ஆலாபனம் மாதிரி இருக்கும். ஒரு ஸ்வரத்திலிருந்து இன்னொரு ஸ்வரத்துக்கு அவர் தாவ மாட்டார்; அப்படியே நழுவி விடுவார். கேட்கும் ரஸிகர்களோ இசை இன்பத்திலே ஆழ்ந்து விடுவார்கள்.

மதுரை மணி ஐயரைச் சங்கீத வித்வான் என்று சொன்னால் மட்டும் போதாது; சங்கீத மேதாவி என்றும் அவரைச் சொல்வது பொருத்தமாயிருக்கும்.

"சுயமாகவே வெளுக்கும் நுரை" ஆடைகளை காப்பாற்றக் கூடியதா?

சன்லைட் சோப் தயாரிக்கும் ரசாயனசாலையில் வேலை செய்யும் ஒருவர் சொல்லுகிறார் . . .

“ஆடைகளைக் காப்பாற்றுமா”? அதுதான் சன்லைட் சோப் நுரையின் முக்கிய வேலை. அழுக்கடைந்த ஆடைகளிலிருந்து அழுக்கை தானாகவே எடுக்கக் கூடிய சக்தியுடையது. வஸ்திரங்களை கல்லின் மேல் அடித்து துவைக்க வேண்டியதில்லை. ஆகையால் ஆடைகள் நைந்து போகாது. சுயமாக வெளுக்கும் நுரையிலுள்ள சுயசக்தியானது அழுக்கை நன்றாக கரைத்துவிட்டு ஜலத்தில் ஆடைகளை அலசினவுடன் அழுக்கைப் போக்கிவிடுகிறது.”




# சன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது

S. 67-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு



## ஒரு வங்காளி வீடு —
## தேநீர் அருந்தும் நேரம்

கவிஞர்கள், கலைஞர்களுடைய சம்பிரதாயத்துக்கு இணங்க, அமைதி நிறைந்து ஆடம்பரமில்லாத ஒரு வங்காளி வீட்டில் ஒரு தனிப்பட்ட வசியம் இருக்கத்தான் செய்கிறது.

அன்றாட வேலை முடிந்த பின் வீட்டில் பேச்சு நடக்கும். இந்தப் பேச்சுக்குத் தோழன் தேநீர். வீட்டுக்காரி அமைதியுடன் கெட்டிலிலிருந்து தேநீரை ஊற்றி, அவரவர்கள் ருசிக்குத் தகுந்தபடி பாலையும் சர்க்கரையையும் அதில் கலக்கிறாள். பேசுவதும், இடையிடையே பேசாவிலும், கோப்பையிலும் உள்ள தேநீரை உறிஞ்சுவதும் என்ன அற்புதமான காட்சி.

இந்தியாவின் மற்றப் பிரதேசங்களைப் போலவே இங்கேயும் புத்தம் புதிதான ப்ரூக்பாண்ட் தேயிலைக்கு நல்ல கிராக்கி இருக்கிறது.

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"

# எழுத்தாளர் மகாநாடு

சாவி

கோவையில் நடந்த எழுத்தாளர் மகாநாட்டுக்குப் போவதற்காக நானும் சாமாவும் சென்ற வெள்ளிக்கிழமை மாலை ஏழு மணிக்கெல்லாம் சென்ட்ரல் ஸ்டேஷனை அடைந்தோம். ஏற்கெனவே மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ சொக்கலிங்கமும் இன்னும் பல எழுத்தாளர்களும் அங்கே கூடியிருந்தார்கள். எங்களுக்கென்று 'ரிஸர்வ்' செய்யப்பட்டிருந்த வண்டி பூட்டப்பட்டிருந்தபடியால் அதைத் திறக்க முடியாமல் திணறிக்கொண்டிருந்தோம். இந்த சமயத்தில் ஸ்ரீ சொக்கலிங்கம் "திறப்பாளர் வ. ரா. எங்கே? அவரைக் கூப்பிடுங்கள். முதலில் ரயில் கதவைத் திறந்து வைக்கட்டும்!" என்றார். இந்தக் கஷ்டத்தை உத்தேசித்துத் தானோ என்னவோ ஸ்ரீ வ. ரா. யாருக்கும் தெரியாமல் வேறொரு வண்டியில் போய்ச் சத்தடி செய்யாமல் உட்கார்ந்து கொண்டிருந்தார்!

கடைசியில் வண்டி புறப்படக் கொஞ்ச நேரத்துக்கு முன்பாக ரயில்வே அதிகாரி ஒருவரால் கதவு திறக்கப்பட்டு எல்லாரும் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டோம். வண்டியில் பதினொரு எழுத்தாளர்கள் தான் இருந்தோம். இதைப் பார்த்த போது "ஐயோ, மகாநாடு என்று சொல்லி விட்டு ஒரு டஜன் எழுத்தாளர்கூட இல்லையே" என்று எனக்குக் கொஞ்சம் வருத்தமாகவே இருந்தது.

சனிக்கிழமை காலையில் கீழ்வானம் வெளுக்கும் சமயம் ரயில் கோயமுத்தூரை அடைந்ததும் ஸ்டேஷனில் ஒரே ஆரவாரமாயிருந்தது. ஸ்டேஷன் வாசலில் பாண்டு வாத்தியமும் மேள வாத்தியமும் முழங்க 'தமிழ் வாழ்க!' 'தமிழ் எழுத்தாளர் வாழ்க!' என்ற ஜய கோஷத்துக்கு இடையே நாங்களெல்லோரும் ரயிலிலிருந்து பெருமிதத்துடன் கீழே இறங்கினோம்.

கோவை வாசிகள் பூமாரி பொழிந்து 'ஜே' கோஷம் போட்டார்கள். இவ்வளவு கோலாகலத்துடன் வந்திருந்த அத்தனை எழுத்தாளர்களும் தயாராய்க் காத்திருந்த மோட்டார்களில் ஏறி மகாநாட்டு மண்டபத்துக்கு ஊர்வலமாய்க் கிளம்பினோம். இருபது மோட்டார்களுக்கு மேல் வரிசையாகப் புறப்பட்டு முக்கிய வீதிகளின் வழியாகச் சென்று மகாநாட்டு மண்டபத்தை அடைய மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. "பொழுது விடிந்து காப்பி கூட இல்லாமல் என்ன ஊர்வலம் வேண்டிக் கிடக்கிறது?" என்று என் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் அடிக்கடி சொல்லிக்கொண்டே இருந்தார். மண்டபத்தை அடைய அவ்வளவு நேரம் ஆனதற்கு மோட்டார்களுக்கு முன்னால் யானையை விட்டிருந்ததே காரணமாகும். யானை அசைந்தாடிக்கொண்டே சாவகாசமாய்ச் செல்ல அதே வேகத்தில்தான் மோட்டார்களும் செல்ல வேண்டியதாயிற்று. பனியையும் கிழித்து இந்த யானைபோகும் வேகத்தையும் பார்த்தபோது எங்களுக்கு "பூஜை வேளையில் கரடியை விட்டமாதிரி ஊர்வல வேளையில் யானையை ஏன் விட்டார்கள்?" என்று தான் கேட்கத் தோன்றியது.

மண்டபத்துக்குப் போகும் வீதி வழியெல்லாம் கோவை வாசிகள் திரள் திரளாகக் கூடி வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றார்கள். தலைவர் கழுத்திலும் திறப்பாளர் ஸ்ரீ வ. ரா. கழுத்திலும் மாலைகள் விழுந்த வண்ணமிருந்தன.



'நான்தான் வ. ரா.'

மணி ஒன்பதுக்கெல்லாம் மகாநாட்டு மண்டபத்தை அடைந்ததும் டிபன் வகையறாக்கள் ஸ்நானம் பானம் எல்லாம் முடிந்த பிறகு மண்டபத்தில் எல்லா எழுத்தாளர்களும் கூடினார்கள்.

சென்னையிலிருந்து பதினொரு எழுத்தாளர்களே அல்லவா போயிருந்ததாகச் சொன்னேன்? அங்கே போனால், தமிழ் நாட்டின்

மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம், ஏன் இலங்கையிலிருந்துகூட, சுமார் 130 எழுத்தாளர்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தனர்.


ப. நீலகண்டன்

தலைவரும் திறப்பாளரும் அவரவர்கள் ஆசனத்தில் அமர, மகாநாடு நாலு மணிக்குத்தான் ஆரம்பம் என்று அறிவிக்கப்பட்டது. அதற்கு முன்பாக வந்திருக்கும் அத்தனை எழுத்தாளர்களும் தாங்கள் யார் யார் என்பதையும் ஊர் பேர் முதலிய விவரங்களையும் சொல்ல வேண்டுமென்று வரவேற்பாளர் ஸ்ரீ திருஞான சம்பந்தம் கூறினார். இந்த அறிமுகச் சடங்கு விஷயமாக எழுத்தாளர்களுக்குள்ளே சிறிது நேரம் சர்ச்சை நடந்தது. அவர்களாகவே மைக்குக்கு முன்னால் வந்து நின்று அறிமுகப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று தலைவர் ஸ்ரீ சொக்கலிங்கம் அறிமுகச் சடங்கை ஒரு நூதனமுறையில் ஆரம்பித்து வைத்தார். முதலில் ஸ்ரீ வ. ரா. எழுந்தார். "நான்தான் வ. ரா." என்று ரத்னச் சுருக்கமாகவும் கச்சிதமாகவும் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். இது விஷயத்தில் ஸ்ரீ வ. ரா. வை ஒருவராவது பின்பற்றவில்லை. கிடைத்த சந்தர்ப்பத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு ஒவ்வொரு எழுத்தாளரும் தங்கள் தங்கள் சுயபுராணத்தை ஆரம்பித்தார் சாங்கோபாங்கமாய்ச் சம்பிரமமாய்த் திருப்திகரமாய் ஒன்றுகூடப் பாக்கி விடாமல் சொல்லித் தீர்த்து விட்டார்கள். இது ரொம்ப நல்ல ஏற்பாடு என்றுதான் எனக்கும் தோன்றிற்று. எழுத்தாளர்களில் ஒருவரைப் பற்றி இன்னொருவர் எடுத்துச் சொல்வது கொஞ்சம் அபூர்வ மாதலால், நம்மைப் பற்றி நாமே சொல்லிக் கொண்டால்தானே உண்டு?

பல எழுத்தாளர்கள் தங்களுடைய பேச்சில் தாங்களே லயித்துப் போவதும் அதில் தங்களுடைய சொந்தப் பெயரைச் சொல்ல மறந்து போய் விடுவதும் பிறகு யாராவது ஞாபகப் படுத்திய பிறகு பெயரைச் சொல்லுவதும் சகஜமாயிருந்தது.

ஒரு எழுத்தாளர் நாற்காலி மீது எழுந்து நின்று கொண்டு "நான் ஒரு 'ரைட்டர்'" என்றார். ஸ்ரீ சொக்கலிங்கம் "ஆங்கிலப் பதம் வேண்டாம்" என்றார்.

"அவசரப்படாதீர்கள்; நான் பள்ளிக்கூடத்தில் ஒரு 'ரைட்டர்'" என்றார். தலைவர் உள்பட எல்லோரும் நகைத்தார்கள்.

"நான் பள்ளிக்கூடத்தில் 'ரைட்டர்' வேலை பார்ப்பதோடு கதை கட்டுரைகளும் எழுதுவேன். ஆகையால் நான் பத்திரிகை உலகத்திலும் 'ரைட்டர்' தான்" என்றார். எங்களால் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

வேறொரு எழுத்தாளர் வந்து தம்மை அறிமுகப் படுத்திக் கொள்ளும் முறையில் தாம் இன்ன பத்திரிகையின் ஆசிரியரென்றும் மேற்படி பத்திரிகைக்குச் சந்தாத் தொகை இவ்வளவு என்றும் பத்திரிகை வாரப் பத்திரிகையா மாதப் பத்திரிகையா அல்லது மாமாங்கப் பத்திரிகையா என்பதைச் சொல்ல முடியாதென்றும் தமக்கு எப்போது இஷ்டமோ அப்போதே பத்திரிகை வெளிவரும் என்றும் கூறினார்.

மற்றொருவர் வந்து தாம் பல கட்டுரைகள் எழுதியிருப்பதாகவும் இப்போதுகூட 'பலப் பலப் பல' கட்டுரைகள் தம் கைவசம் இருப்பதாகவும் ஆகையால் தாம் ஒரு எழுத்தாளர் என்றும் அறிமுகப் படுத்திக் கொண்டார். இம்மாதிரி 'பலப் பலப் பல' விதமாய் அறிமுகங்களெல்லாம் ரொம்ப ரொம்ப வேடிக்கையாக நடந்தேறின.


பலப் பலப் பல......

கடைசியாக வந்தாரே பார்க்கலாம் ஒரு ஆசாமி! அவரைப் பார்க்கும்போது "இவர் ஒரு எழுத்தாளரா!" என்று எல்லோருக்கும் ஆச்சரியமாய்ப் போயிற்று. அவருடைய மீசையையும் தாடியையும் அழுக்கு ஆடை



ஐ. பி. கோவிந்தசாமிப் பிள்ளை

களையும் கண்ட ஒருவர் அவரை முதலில் உள்ளே விடவே மறுத்து விட்டாராம். பாவம்! வயதானவரா யிருந்தார். ஆனால் அவர் மைக்குக்கு முன்னால் வந்து மிடுக்காகவும், ரோஷமாகவும், ஹாஸ்யமாகவும் பேசியதைப் பார்த்தால் அவரை வயதானவர் என்றே சொல்ல முடியாது. அவர் பேசி முடிகிற வரையில் எங்களால் சிரிப்பை அடக்க முடியவேயில்லை. ரொம்பக் காலமாய் அவர் பத்திரிகைகளுக்கு எழுதுகிறாராம். ஐ. பி. கோவிந்தசாமிப் பிள்ளை என்று பெயராம். அந்த நாளிலெல்லாம் பத்திரிகைகளின் முகப்பில்,

“ கடிதக்காரர்கள் அபிப்ராயத்துக்கு
பத்திராதிபர் உத்தரவாதியல்ல ”

என்று போடுவார்களாம். ஐம்பது வருஷமாய் அதாவது காலணாக் கார்டு காலம் முதல் தமக்கு எழுதுவதில் அனுபவம் உண்டென்றும், ஏழாம் எட்வர்டு சக்ரவர்த்தி காலத்தில் இருந்த காலணாக் கார்டை இன்னும் கொஞ்சம் அகல நீளமாகப் போட வேண்டுமென்று சர்க்காரோடு சண்டை பிடித்திருப்பதாகவும் கூறினார். “இப்போது கூட ஒரு நீண்ட காவல் எழுதி வைத்திருக்கிறேன்; ஆமாம்!” என்று பயமுறுத்தினார்.

அறிமுகச் சடங்கு எல்லாம் ஒருவாறு முடிந்த பிறகு ஸ்ரீ கம்பதாஸன் எழுந்து வீராவேசமாய்ப் பாடினர்.

“ அறிவு வாய்ந்த எழுத்தாளர்
ஒன்றுக் விட்டோம் ......
பாரெங்கும் புகழ் கொள்ள
பணிசெய்து வாழ்வோம் ......”

என்று கடைசி அடியைப் பாடும்போது அவருக்கிருந்த ஆவேசத்தைக் கண்டு நான் நடுநடுங்கிப் போனேன். நான் அவருக்குச் சமீபத்தில் உட்கார்ந்து கொண்டிருந்ததால் எங்கே அவர் என் மீது விழுந்து வைக்கப் போகிறாரோ என்றுதான்!

சாயந்திரம் மகாநாடு ஆரம்பமானதும் மகாநாடு வெற்றிகரமாய் நடக்க வேண்டுமென்று பல ஊர்களிலிருந்து வந்திருந்த வாழ்த்துக் கடிதங்களையும் தந்திகளையும் வரவேற்பாளர் ஸ்ரீ திருஞானசம்பந்தம் ஆரோஹணம் அவரோஹணம், கமா, முற்றுப்புள்ளி ஒன்று மில்லாமல் கடகட வென்று மெயில் வேகத்தில் படித்துத் தீர்த்தார். பின்னர் ஸ்ரீ வ. ரா. எழுந்திருந்து மகாநாட்டைத் திறந்து வைத்து ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்ட தமது திறப்பு விழாப் பிரசங்கத்தைப் படித்து முடித்தார். படிக்கும் போது, படிக்கிறோம் என்ற முறையில்லாது பேசுகிறோம் என்ற முறையில் அபிநய பாவங்களுடன் நின்று நிதானித்துப் பேசிப் படித்தார்.



வீராவேசமாய்ப் பாடிய கம்பதாஸன்.

பிறகு தலைவர் ஸ்ரீ சொக்கலிங்கம் தமக்கென்றே உரித்தான தனிப் பாணியில் தமது தலைமைப் பிரசங்கத்தை வாசித்தார்.


பெ. தூரன்

இரவு சாப்பாட்டுக்குப் பின் கூடிய விஷயாலோசனைக் கமிட்டியில் மறு நாள் எதை எதைப் பற்றித் தீர்மானம் நிறைவேற்றுவது என்ற பிரச்னையைக் குறித்து விவாதம் நடந்தது. அதன்படி மறு நாள் மகாநாட்டில் பதினொரு தீர்மானங்களை நிறைவேற்றினார்கள். அவற்றுள் நான்கு தீர்மானங்கள் மிகவும் முக்கியமானவை :—

(1) அகில இந்திய பத்திரிகாசிரியர்கள் லாகூரில் கூடி உதவி ஆசிரியர்கள் சம்பள விஷயமாய் நிறைவேற்றிய தீர்மானத்தைக் கண்டித்து வாபஸ் வாங்கச் சொல்லி மன்னிப்பும் கோர வேண்டுமென்பது.

(2) எட்டயாபுரத்தில் பாரதி ஞாபகார்த்த வாசகசாலைக்கு நிதி திரட்டுவது.

(3) எழுத்தாளர்களுக்கு ஒரு இன்ஷூரன்ஸ் திட்டம்.

(4) கடைசியாக, பத்திரிகைகளில் இடத்தைச் சிக்கனம் செய்யும் பொருட்டுத் தமிழ் எழுத்துக்களை மாற்றி அமைக்க வேண்டுமென்ற தீர்மானம்.

மேற்படி தீர்மானத்தின் கர்த்தா தலைவர் ஸ்ரீ சொக்கலிங்கம் அவர்கள்தான். உதாரணமாகச் சில எழுத்துக்களை இவ்வாறு மாற்றலாம் என்று அவர் கூறினார்: லை = லை. றா = றா. இதற்குச் சங்க காலத்தை ஆதாரமாக எடுத்துக் காட்டினார். எழுத்துக்களை மாற்றுவதற்குப் பயப்படத் தேவையில்லை என்றும் சங்க காலத்திலேயே எழுத்துக்கள் மாறித்தான் இருந்தன என்றும் 'க' என்ற எழுத்து 'பிளஸ்' குறி மாதிரி + இப்படி இருந்ததென்றும் கூறினார். அந்தக் காலத்தில் அவர்கள் கல்வெட்டுக்குச் சௌகரியமாக எழுத்துக்களை மாற்றி வைத்துக் கொண்டிருந்ததைப்போல் நாமும் நம்முடைய சௌகரியத்துக்கு மாற்றிக் கொள்ளலாம் என்பது அவர் அபிப்ராயம். இந்தத் தீர்மானத்தை அவர் வோட்டுக்கு விட்டபோது இரண்டே இரண்டு பேர்கள்தான் கையைத் தூக்கி ஆட்சேபித்தார்கள். அவர்களில் அடியேனும் ஒருவன்! முதலில் சாதகமாகக் கை தூக்குகிறவர்களெல்லாம் தூக்கலாம் என்று தலைவர் கூறியபோது எல்லோரும் தூக்கினார்கள். நானும் தூக்கினேன்! பிறகு ஆட்சேபித்துத் தூக்குகிறவர்கள் தூக்கலாம் என்று சொன்னதும் ஒரே ஒருவர் மட்டும் தூக்கினார். அந்தக் கண்றாவிக் காட்சியைக் கண்ணால் காணச் சகியாமலேயே அந்த ஆசாமிக்கு ஒத்தாசையாக நானும் தூக்கி வைத்தேன்! தீர்மானங்களை அவ்வப்போது ஆதரித்துப் 'பாரத தேவி' ஸ்ரீ கே. அருணாசலம், ஹிந்துஸ்தான் ஸ்ரீ நாராயண அய்யங்கார், கோவை ராமகிருஷ்ண வித்யாலயத் தலைமை ஆசிரியர் ஸ்ரீ பெ. தூரன், கலைவாணி ஆசிரியர் ப. நீலகண்டன் முதலிய எழுத்தாளர்கள் மேடையில் வந்து பேசிய போது அவர்களெல்லாம் சிறந்த பேச்சாளர்கள் என்பதும் வெளியாயிற்று.

கடைசி கடைசியாகக் கம்பதாசனுடைய இனிய கீதத்தோடு மகாநாடு அமோகமான வெற்றியுடன் முடிவடைந்தது. வரவேற்பாளர் ஸ்ரீ திருஞானம் எங்களையெல்லாம் வரவேற்பதில் எவ்வளவு உற்சாகம் காட்டினாரோ அதைவிட இரண்டு மடங்கு உற்சாகத்தை எங்களை ஊருக்கு அனுப்புவதிலும் காட்டினார். அவர் அவ்வளவு சிரத்தை எடுத்துக்கொண்டு எங்களுக்கு இடம் 'ரிஸர்வ்' செய்து கொடுத்திராவிட்டால் நாங்களெல்லாம் சென்னை வந்து சேர்வதற்கே பெரிய கஷ்டமாய்ப் போயிருக்கும்.


ரா. நாராயண ஐயங்கார்

# சிவகாமியின் சபதம்

அத்தியாயம் 31

## மாமல்லர் ஊகம்

தெப்பம் பாறையில் மோதிற்று. பானைகள் சடசடவென்று உடைபட்டன. பானைகளின் மேல் கட்டியிருந்த மூங்கில்கள் நறநறவென்று முறிந்தன. தெப்பம் ஒரு சுற்றுச் சுற்றித் தபதபவென்று தண்ணீரில் முழுகிற்று.

பாறையிலே தெப்பம் மோதிய அதே சமயத்தில் சிவகாமி 'ஆ!' என்று சத்தமிட்டுக் கொண்டு படகில் எழுந்து நிற்க முயன்றாள். அடுத்த கணத்தில் அவள் தூக்கித் தண்ணீரில் எறியப்பட்டாள்.

கண் முன்னால் ஆயிரம் மின்னலின் ஒளிபோல் பிரகாசமாயிருந்தது. அப்புறம் ஒரே இருள் மயமாயிற்று. காதில் 'ஙொய்' என்ற சத்தம் ஒலித்துக் கொண்டிருந்தது.

வெகு நேரமாகத் தோன்றிய உணர்ச்சியற்ற நிலைக்குப் பிற்பாடு, சிவகாமிக்கு ஏதோ உணர்ச்சி உண்டாவதுபோலிருந்தது. கால் விரல்களிலே மணல் தட்டுப்படுவது போல் தோன்றியது. வெள்ளத்தில் பானைத் தெப்பத்தில் ஏறி வந்தது, தெப்பம் பாறையிலே மோதியது ஆகிய எல்லாம் ஒரு கணத்தில் ஞாபகத்துக்கு வந்தன. உடனே, தான் தண்ணீருக்குள்ளே முழுகியிருப்பதும், மூச்சு விடக் கஷ்டப்படுவதும் உணர்வில் தோன்றியது.

"ஆஹா! மாமல்லரும் இந்தப் பெரு வெள்ளத்திலே முழுகியிருப்பாரல்லவா? அவருக்கு இந்த கதி நம்மால் தானே வந்தது?" என்ற நினைவு தோன்றி வேதனையளித்தது.

"ஆஹா! இரண்டு பேரும் சேர்ந்து தானே வெள்ளத்திலே முழுகினோம்; ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு செத்துப் போகக் கூடாதா?" என்ற எண்ணம் மின்னல் போல் உதித்ததும், அதே கணத்தில் ஒரு கரம் அவளுடைய கரத்துடன் தட்டுப்பட்டது. மறு கணத்தில் அந்தக் கரம் அவளுடைய கையைப் பற்றியது. ஆ! அது மாமல்லரின் உறுதியான கரம்தான்; சந்தேகமில்லை. ஆஹா! நமது கடைசி மனோரதம் உண்மையிலேயே நிறைவேறப் போகிறதா? சண்டையும், சூழ்ச்சியும், கொடுமையும் நிறைந்த இந்த உலகை விட்டு நீங்கிச் சொர்க்க லோகத்தில் புகும்போது தானும் மாமல்லரும் கைகோத்துக் கொண்டு போகப் போகிறோமா?

ஆ! இதென்ன! கால் நன்றாய் ஊன்றுகிறதே! — இதோ கூழாங்கற்கள் காலில் தட்டுப்படுகின்றனவே! — இதோ திடீரென்று வெளிச்சம்!

தண்ணீர் வரவரக் கீழிறங்கி, கழுத்து மட்டுக்கும் வந்து, மார்பு மட்டுக்கும் வந்து, பிறகு இடுப்பு மட்டுக்கும் வந்து விட்டது. ஆனால் பிரவாகத்தின் வேகம் மட்டும் குறையவில்லையாதலால் சிவகாமியை உருட்டித் தள்ளப் பார்த்தது. அதோடு மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் கொட்டிய படியால் சிறிது

கல்கி

நேரம் வெகு வேதனையாயிருந்தது. இவ்வளவு அவஸ்தைகளுக்கிடையில், தன் கரத்தை மாமல்லர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நிற்பதையும், தன்னைப் போலவே ஆயனர், குண்டோதரன், அத்தை எல்லாரும் இடுப்புக்குக் கீழே போன வெள்ளத்தின் வேகத்தினால் தடுமாறிக் கொண்டிருப்பதையும், அவர்கள் மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் தண்ணீர் கொட்டுவதையும் சிவகாமி கண்டாள். சுகர் தரையில் வட்டமிட்டுக் கொண்டு 'கீச்' 'கீச்' என்று கத்துவதையும், ரதி எப்படியோ வெள்ளத்திலிருந்து பிழைத்து, கரை மீதிருந்த பாறையில் தலையை வைத்துக் கொண்டு ஏற முடியாமல் கால்களை உதைத்துக் கொள்வதையும் பார்த்தாள்.

*       *       *

**பா**னைத் தெப்பம் மோதிய இடத்தில் வெள்ளத்தின் வேகத்தினால் பெரிய பள்ளம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அதற்கடுத்தாற்போல் சமீபத்திலேயே ஆழம் குறைந்து தண்ணீர் மேட்டுப் பாங்கான இடத்தில் பரவிப் பரவிப் பரந்து சென்றது. இக்காரணத்தினால் உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் எல்லாரும் தப்பிப் பிழைப்பது சாத்தியமாயிற்று.

எல்லாரும் தட்டுத் தடுமாறிக் கரை ஏறியானதும் "ஐயோ! போச்சே!" என்றான் குண்டோதரன்.

மற்றவர்கள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தார்கள். "என்ன போய் விட்டது, அப்பா!" என்று ஆயனர் கேட்டதும், "அவல் மூட்டை போச்சே!" என்றான்.

சற்று நேரம் எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள். பிறகு, புருஷர்களும் ஸ்திரீகளும் தனித் தனியே துணிகளைப் பிழிந்து உலர்த்திக் கட்டிக் கொள்வதற்காக வெவ்வேறு திசை நோக்கிச் சென்றார்கள்.

குண்டோதரனும் குமார சக்கரவர்த்தியும் ஒரு பக்கமாகப் போனபோது, "குண்டோதரா! அவல் மூட்டை போனதைப் பற்றி நீ அழுகிறாயே? தெப்பம் போய்விட்டதே, அதற்கு என்ன செய்கிறது?" என்று மாமல்லர் கேட்டார்.

"பிரபு! நல்ல வேளையாய் இந்தப் பாறைப் பிரதேசத்துக்கு வந்து தெப்பம் மோதிக் கவிழ்ந்ததே என்று எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. இல்லாவிடில் தெப்பம் கடலில் போய்த்தானே சேர வேண்டும்? சமுத்திரத்து அலைகளிலே இந்தப் பானைத் தெப்பம் என்ன செய்யும்?" என்றான் குண்டோதரன்.

"இருந்தாலும், தெப்பத்தையும் காப்பாற்றியிருக்கலாம். நீ மட்டும் இன்னும் கொஞ்சம் லாகவமாய்க் கழி போட்டிருந்தால்......"

"அப்படி அவசியம் வேணுமென்றால், அதோ கிராமம் தெரிகிறதே,—அங்கே பானைகள் சம்பாதித்துத் தெப்பம் கட்டிக் கொள்ளலாம், பிரபு! ஆனால், இப்போது தெப்பம் எதற்கு? இந்த வெள்ளத்தில் நாம் எங்கே போக முடியும்? நல்ல வேளையாய்ப் பத்திரமான இடத்துக்கு வந்து சேர்ந்தோம். வெள்ளம் அடங்குகிற வரையில் இங்கேயே இருப்பதுதான் நல்லது!"

"அழகுதான், குண்டோதரா! என் சைன்யத்தை எங்கேயோ விட்டு விட்டு நான் இங்கே இருக்க வேண்டுமென்று சொல்கிறாய்? இவர்களை ஒரு பத்திரமான இடத்தில் சேர்த்த உடனே நாம் இதே தெப்பத்தில் கிளம்பலாமென்று எண்ணியிருந்தேன்......."

"கிளம்பி என்ன பிரயோஜனம் பிரபு! இந்தப் பெரு வெள்ளத்தில் எங்கே போகிறது? என்ன செய்கிறது? சைன்யம் தாங்கள் விட்ட இடத்திலேயே இருக்குமா? தென் பெண்ணைக்கரை யெல்லாம் இப்போது ஒரே வெள்ளக் காடாய் இருக்குமே!"

"அதனாலேதான் அவசியம் நான் போக வேண்டும். பரஞ்சோதியும், கண்ணனும், மற்றவர்களும் என்ன ஆனார்களோ, என்னமோ? ஆஹா! அவர்கள் எல்லாம் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்?"

"என்ன நினைப்பார்கள்? தாங்கள் பத்திரமாயிருக்க வேண்டுமே என்றுதான் நினைப்பார்கள். அவர்களைப் பற்றித் தங்களுக்குச் சிறிதும் கவலை வேண்டியதில்லை. ஏரி உடைத்துக்

கொண்ட தகவல் அவர்களுக்கு நல்ல சமயத்தில் போய்ச் சேர்ந்திருக்கும்!''

''எப்படிச் சேர்ந்திருக்கும்? உனக்கு எப்படித் தெரியும்?''

துணிகள் உலர்ந்து கொண்டிருக்கையில், குண்டோதரன் தன்னுடைய வரலாற்றை மாமல்லருக்கு விவரமாகக் கூறினான். நாகநந்தி விஷயமாக ஆடியில் சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட சந்தேகத்தையும், அதன் பேரில் ஆயனார் வீட்டுக்குச் சத்ருக்னர் தன்னைக் காவல் போட்டதையும் சொன்னான். எட்டு மாதத்திற்குப் பிற்பாடு நாகநந்தி வந்து இவர்களை அழைத்துப் போனதையும், அதைச் சத்ருக்னரிடம் தெரிவித்து விட்டுத் தான் திரும்பி வந்து இவர்களைச் சாலையில் சந்தித்ததையும் தெரிவித்தான். நாகநந்தியைத் தொடர்ந்து புள்ளலூர்ப் போர்க்களத்துக்குப் போய் மீண்டும் அவருடனேயே அவர் அறியாமல் திரும்பியதையும், முதல் நாள் இரவு நாகநந்தியைத் தொடர்ந்து ஏரிக்கரைக்குப் போய் அவருடன் துவந்த யுத்தம் செய்ததையும் விவரித்தான். அப்போது ஒரு அதிகாரக் குரல் தன்னை எச்சரித்ததையும், தான் அவ்விதமே திரும்பி வந்து வயோதிக புத்த பிக்ஷுவைத் தள்ளி விட்டுத் தெப்பத்தைக் கைப்பற்றிக் கொண்டு வந்ததையும் கூறி முடித்தான்.

குண்டோதரன் கூறியதையெல்லாம் கேட்டு, மகேந்திர பல்லவரின் முன் யோசனையிலும் சூழ்ச்சித் திறமையிலும் மாமல்லருக்கு இருந்த மதிப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. குண்டோதரனுடைய சாமர்த்தியத்தைப் பற்றியும் அவர் மிக்க வியந்து அவனைப் பாராட்டினார்.

''ஆனால், நீ அந்த வயோதிக பிக்ஷுவைத் தெப்பத்திலிருந்து தள்ளியது மட்டும் எனக்குப் பிடிக்கவில்லை, குண்டோதரா! அந்தப் பாவத்தை ஏன் செய்தாய்?'' என்று கேட்டார்.

''அது பாவமில்லை, பிரபு! பெரிய புண்ணியம்! அவன் புத்த பிக்ஷுவுமில்லை; ஒன்றுமில்லை. காஞ்சி நகர்த் தெற்குக் கோட்டை வாசல் காவலனாயிருந்தவன். இந்த நாகநந்தியின் வலையில் விழுந்து தேசத் துரோகியாகி விட்டான். அவனை வெள்ளத்தில் தள்ளியதோடு விட்டோமே என்றுதான் கவலையாயிருக்கிறது. அவன் தலையில் ஒரு கல்லையும் தூக்கிப் போட்டிருக்க வேண்டும்!'' என்றான் குண்டோதரன்.

''அப்படியானால், எல்லாவற்றுக்கும் மூல காரணமான நாகநந்தியை ஏன் உயிரோடு விட்டாய்? அவரையும் கொன்று விடுவதற்கென்ன?'' என்று மாமல்லர் கேட்டார்.

''பிரபு! எப்படியும் அந்த நாகப் பாம்பைக் கொன்று தீர்த்து விடுவது என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால், 'சண்டையை நிறுத்து!' என்று இருளில் கேட்ட அதிகாரக் குரலின் கட்டளையை என்னால் மீறக்கூடவில்லை. ஆகையினால்தான் உடைப்பிலே தள்ளி விட்டு வந்தேன். யார் கண்டார்கள்? உடைப்பு வெள்ளத்தில் அந்த வேஷதாரி பிக்ஷு மூழ்கி ஒழிந்து போயிருந்தாலும் போயிருக்கலாமல்லவா?''

''கூடாது! குண்டோதரா! கூடாது! அப்பேர்ப்பட்ட பாதகனுக்கு அவ்வளவு சுலபமான மரணம் கூடாது. மற்றதெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். ஆயனரும் சிவகாமியும் எப்பேர்ப்பட்ட அபாயத்துக்கு உள்ளாகி விட்டார்கள்?......''

''பிரபு! மன்னிக்க வேண்டும். நாகநந்தியைப் பற்றி இவர்களிடம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமலிருப்பதே நலம். இவர்களுக்கு விஷயம் ஒன்றும் விளங்காது. வீணில் மனத் துன்பம் அடைவார்கள்......''

''உண்மைதான்; குண்டோதரா! அவர்களிடம் பிரஸ்தாபிக்க வேண்டியதில்லை.''

''ஏரிக் கரையில் உனக்குக் கட்டளையிட்ட குரல் யாருடையது என்று தெரியவில்லையா?'' என்று மாமல்லர் கேட்டார்.

''தெரியவில்லை, ஐயா!''

''ஊகிக்கக்கூட முடியவில்லையா?''

''ஊகித்தேன், பிரபு! ஆனால் தங்களிடம் சொல்லத் தைரியமில்லை. மன்னிக்க வேண்டும்.''

"ஆஹா!" என்றார் மாமல்லர்.

எச்சரித்தவர் மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்குமோ என்ற எண்ணம் ஏற்கெனவே அவர் மனதில் தோன்றியிருந்தது. குண்டோதரனும் அப்படியே ஊகிக்கிறான் என்று இப்போது தெரிந்தது.

மாமல்லரின் உள்ளத்தில் மகிழ்ச்சி, வெட்கம் வேதனை ஆகிய உணர்ச்சிகள் ஏககாலத்தில் உதயமாயின. குண்டோதரனை எச்சரித்தது மகேந்திர சக்கரவர்த்தியாயிருக்கும் பட்சத்தில், சைன்யத்தைப்பற்றிக் கவலையில்லை. எல்லாரும் காப்பாற்றப் பட்டிருப்பார்கள். ஆனால், தம்மிடம் நம்பிக்கையில்லாமல் தானே அவர் தொடர்ந்து வந்திருக்க வேண்டும்? அதற்குத் தகுந்தாற்போல் இருக்கிறதல்லவா தன்னுடைய காரியமும்? நதிக்கரையிலே சைன்யத்தை நிறுத்தி விட்டுத் தனியாக வந்து வெள்ளத்திலேயும் சிக்கிக் கொண்டோமல்லவா? சக்கரவர்த்தியை மறுபடியும் சந்திக்கும்போது, அவர் முகத்தை எவ்விதம் ஏறிட்டுப் பார்ப்பது?

இதற்கு மாறாக இன்னொருவித சிந்தனையும் உண்டாயிற்று. ஆஹா! எது எப்படி வேணுமானாலும் போகட்டும்! என்ன அபகீர்த்தி, அவமானம் ஏற்பட்டாலும் ஏற்படட்டும். இந்த ஒரு நாள் ஆனந்த வாழ்வுக்காக எதை வேணுமானாலும் சகித்துக் கொள்ளலாமல்லவா? இனி வருங்காலமெல்லாம் இந்த ஒரு தினத்தின் இன்பமய வாழ்க்கையை நினைத்து நினைத்துப் பார்த்து மகிழ்ச்சியடையலாமல்லவா?

"பிரபு! நடந்தது நடந்துவிட்டது. இனிமேல் நடப்பதைப் பற்றித்தானே யோசிக்க வேண்டும்?" என்று குண்டோதரன் கூறி மகாமல்லரின் சிந்தனையைக் கலைத்தான்.

"ஆமாம், நடப்பதைப் பற்றித்தான் யோசிக்க வேண்டும். ஆனால் வேறு என்ன யோசனை செய்ய இருக்கிறது? வெள்ளத்திலே வந்து மாட்டிக்



கொண்டு விட்டோம். இங்கிருந்து போகும் வழியைத் தேடவேண்டும்...''

"பிரபு! இன்று இரவு தங்குவதைப் பற்றி முதலில் யோசிப்போம். திறந்த வெளியிலே தங்க முடியாதல்லவா? இரவு மழை பிடித்துக் கொண்டால் என்ன செய்கிறது?''

"பின்னே, எங்கே தங்கலாம் என்று நினைக்கிறாய்?''

"அதோ சற்றுத் தூரத்தில் ஒரு கிராமம் தெரிகிறது. பிரபு! அங்கே போய் நான் முதலில் விசாரித்துக் கொண்டு வருகிறேன். இடவசதியிருந்தால் கிராமத்திலே தங்கலாமல்லவா?'' என்றான் குண்டோதரன்.

"அப்படியே செய்!'' என்றார் மாமல்லர்.

அப்போது "மாமல்லா! மாமல்லா!'' என்ற சுகரிஷியின் குரலைக் கேட்டு, அந்தக் குரல் வந்த வழியே சென்றார் மாமல்லர். பாறையருகில் சிவகாமி தனியாக உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அருகிலிருந்த மகிழ மரத்தடியில் அவரும் உட்கார்ந்தார்.



## அத்தியாயம் 32

# மகிழ மரத்தடியில்

விரைந்து சென்ற வெள்ளத்தின் இரைச்சலைத் தவிர வேறு சத்தம் எதுவும் சற்று நேரத்துக்கு அங்கு இல்லாமலிருந்தது.

மாமல்லர் கண் கொட்டாமல் சிவகாமியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். சிவகாமி சிறிது நேரம் தரையைப் பார்ப்பாள்; சிறிது நேரம் வெள்ளத்தையும் வானத்தையும் பார்ப்பாள். இடையிடையே மாமல்லரின் முக தாமரையிலும் அவளுடைய இரு விழிகளாகிய கரு வண்டுகள் ஒரு கணம் மொய்த்து விட்டு விரைவாக அகன்று செல்லும்.

புயலுக்கு முன்னால் ஏற்படும் அசாதாரண அமைதியைப் போன்ற இந்த மௌனத்தைக் கண்டு சுகரிஷியும் கூட வாய்திறவாமல் சிவகாமியின் முகத்தையும் மாமல்லரின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தார். கடைசியில் பொறுமை இழந்தவராய், "இந்த வாய் மூடி மௌனிகளுடன் நமக்கு என்ன சகவாசம்?" என்று சொல்கிறதைப் போல், இறகுகளைச் சடசடவென்று அடித்துக் கொண்டு, அங்கிருந்து பறந்து சென்றார்!

கிளி போனதும் மாமல்லரும் மௌனத்தைக் கலைக்க விரும்பியவராய், "சிவகாமி! என்ன சிந்தனை செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

சிவகாமி மாமல்லரின் முகத்தை ஏறிட்டு நோக்கி, "சற்று முன்னால் தண்ணீரில் மூழ்கினேனே, அப்படியே திரும்பிக் கரை ஏறாமல் வெள்ளத்தோடு போயிருக்கக் கூடாதா — என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்" என்றாள்.

"அப்படியானால் நான் உன்னைத் தேடிக்கொண்டு வந்ததெல்லாம் பிசகு என்று ஏற்படுகிறது. இப்போது கூட ஒன்றும் மோசம் போய்விடவில்லையே? பெரு வெள்ளம் வெகு சமீபத்தில்தானே ஓடுகிறது!" என்றார் மாமல்லர்.

"உண்மைதான்; வெள்ளம் வெகு சமீபத்திலே ஓடுகிறது! ஆனால் தானாக வெள்ளத்தில் விழுந்து சாவதற்கு மனம் வருகிறதா? அதுவும் நீங்கள் அருகில் இருக்கையில்......" என்று சிவகாமி கூறியபோது, அவளுடைய கண்களில் கண்ணீர் தளும்பிற்று.

"சிவகாமி! இது என்ன! ஏதாவது சந்தோஷமாய்ப் பேசலாம் என்று பார்த்தால் நீ இப்படியெல்லாம் ஆரம்பித்து விட்டாயே!" என்றார் மாமல்லர்.

"பிரபு! இன்றைய தினத்தைப் போல் நான் என்றைக்கும் ஆனந்தமாயிருந்தது கிடையாது. அதனாலேதான், அத்தகைய ஆனந்தத்தின் முடிவிலே என் வாழ்நாளும் முடிந்திருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது!"

"அழகாயிருக்கிறது, நீ ஆனந்தம் கொண்டாடுகிற விதம்!" என்றார் நரசிம்ம வர்மர்.

"சென்ற ஒரு வருஷ காலமாக நான் அநுபவித்த துன்பத்தையும் வேதனையையும் அறிந்தால் இப்படிச் சொல்ல மாட்டீர்கள்!" என்றாள் சிவகாமி.

"ஆஹா! துன்பமா? உனக்கு என்ன துன்பம் நேர்ந்தது? ஏதாவது உடம்பு அசௌகரியமா? ஏன் எனக்குச் சொல்லி அனுப்பவில்லை?"

"இந்த உடம்புக்கு ஒன்றுமில்லை, பிரபு! உடம்பு, மூன்று வேளையும் சாப்பிட்டுக் கொண்டு, ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டு, சௌக்யமாய்த்தானிருந்தது. எல்லாத் துன்பத்தையும் வேதனையையும் உள்ளம்தான் அநுபவித்தது!"

"ஆஹா! துன்பமும் வேதனையும் உனக்கேன் வரவேண்டும்? யாராவது உன்னை உபத்திரவப்படுத்தினார்களா, என்ன? உன் தந்தை ஆயனர் அதைத் தடுக்காமல் என்ன செய்து கொண்டிருந்தார்?"

சிவகாமி எதைக் குறிப்பிட்டு இவ்விதமெல்லாம் பேசுகிறாள் என்பது பல்லவ குமாரருக்குத் தெரிந்துதான் இருந்தது. எனினும், அவன்

வாயினால் சொல்லிக் கேட்பதற்காகவே அவ்விதம் புரிந்து கொள்ளாதவர் போல் பேசி வந்தார்.

அதற்குச் சிவகாமி, "ஒருவராலும் எனக்கு ஒரு உபத்திரவமும் ஏற்படவில்லை. காட்டிலே வளர்ந்த பேதைப் பெண்ணாகிய எனக்குப் பேசத் தெரியவில்லை, பிரபு! என் மனவேதனைக்கெல்லாம் காரணம் தங்களுடைய நினைவுதான்!" என்று கூறிக் கண்களிலிருந்து கலகல வென்று கண்ணீர் வடித்தாள்.

மாமல்லர் ஆர்வம் பொங்கிய கண்களினாலே அவளைப் பார்த்து, "இவ்வளவுதானே, சிவகாமி! இதற்காக ஏன் கண்ணீர் விடவேண்டும்? நீ மட்டுந்தானா அந்தத் துயரத்தை அநுபவித்தாய்? நானுந்தான் உன்னுடைய நினைவினால் எவ்வளவோ வேதனைகளை அநுபவித்தேன்! என்னுடைய ஓலைகளையெல்லாம் நீ படிக்கவில்லையா?" என்று கேட்டார்.

"படித்தது மட்டுமா! தாங்கள் எழுதியிருந்த ஒவ்வொரு எழுத்தையும் மனப்பாடம் செய்திருக்கிறேன். ஒவ்வொரு ஓலையையும் நூறு தடவை ரதிக்குப் படித்துக் காட்டியிருக்கிறேன். ஓலையைப் படிக்கும்போது சந்தோஷமாயிருக்கும். அப்புறம் அவ்வளவுக்கவ்வளவு வேதனை அதிகமாகும்; தங்கள் பேரில் கோபம் கோபமாய் வரும்......"

"சிவகாமி! உனக்கு என் பேரில் கோபித்துக் கொள்ளும் சௌகரியமாவது இருந்தது. எனக்கு அதுகூட இல்லை!.........யாருடைய துன்பம் அதிகம் என்று சொல்!"

"என்பேரில் தாங்கள் கோபித்துக் கொள்ளவில்லையா? நிஜமாக இல்லையா? அப்படியானால், அசோகபுரத்துப் புத்த விஹாரத்தின் வாசலிலே என்னைப் பார்த்து விட்டு ஒரு கண நேரங்கூடத் தாமதிக்காமல் போனீர்களே, ஏன்? என்பேரில் இருந்த அன்பினாலேதான் அவ்விதம் போனீர்களா?"

"ஆம், சிவகாமி! நான் வரும் வரையில் அரண்ய வீட்டிலேயே இருக்கும்படி சொல்லியிருந்தும் நீங்கள் கிளம்பி வந்து விட்டீர்களே என்று எனக்குக் கோபமாய்த்தானிருந்தது. ஆனால், அன்றிரவே புயலையும் மழையையும் பொருட்படுத்தாமல் நான் வரவில்லையா? எவ்வளவு முக்கியமான காரியங்களை விட்டுவிட்டு வந்தேன், தெரியுமா? இப்போதுகூட அங்கே என்ன விபரீதம் நடந்திருக்கிறதோ என்று நினைக்கும்போது என் கதி கலங்குகிறது. அதையெல்லாம் மறந்துவிட்டு உன்னுடைய பொன் முகத்திலே ஒரு புன் சிரிப்புக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன். நீயோ கண்ணீர் விட்டு என்னைக் கலங்க அடிக்கிறாய்!" என்றார் மாமல்லர்.

"எல்லாம் உங்களால் ஏற்பட்ட மாறுதல்தான், சுவாமி! இரண்டு மூன்று வருஷத்துக்கு முன்னாலே என்னை யாரும் புன்னகை செய்யும்படியோ உரத்துச் சிரிக்கும்படியோ கேட்கவேண்டியிருந்தது கிடையாது. ஓயாமல் சிரிப்பும் சந்தோஷமுமாய்த்தானிருந்தேன். காட்டில் யதேச்சையாய்த் திரியும் மானைப்போல் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தேன். என் தந்தைகூட என்னை அடிக்கடி 'இப்படிச் சிரிக்காதே, சிவகாமி! பாஞ்சாலி சிரித்துத்தான் பாரதப் போர் வந்தது. பெண்கள் அதிகமாய்ச் சிரிக்கக் கூடாது' என்று எச்சரிப்பதுண்டு. அப்பேர்ப்பட்ட சிரிப்பு, குதூகலம் எல்லாம் இப்போது எங்கே போய் விட்டது? எப்படிப் போய்விட்டது? நினைத்தால், எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது......"

"எங்கே, எப்படிப் போயிற்று என்று என்னிடந்தான் சொல்லேன், சிவகாமி!" என்றார் நரசிம்ம வர்மர்.

"சொல்லுகிறேன். எனக்கும் யாரிடமாவது சொல்ல வேண்டும் என்றுதான் இருக்கிறது. ஆனால், யாரிடம் சொல்வேன்? நானோ தாயில்லாப் பெண், பிரபு! என் தந்தை எப்போதும் கனவு லோகத்திலே சஞ்சரித்துக்கொண்டிருப்பவர். கமலி அக்கா ஒருத்தி இருக்கிறாள். என் உள்ளத்திலிருந்து குதூகலத்தையும், முகத்திலேயிருந்து புன்சிரிப்பையும் கவர்ந்த மனிதர் சக்கரவர்த்தி குமாரராயில்லாமல் சாதாரண மனிதராயிருந்தால், கமலி அக்காவிடம் என் மனதைத் திறந்து காட்டி ஆறுதல் அடையலாம். அதற்கும் வழியில்லா

மல் போய்விட்டது. ஆகையால் உங்களிடந்தான் சொல்லியாக வேண்டும்......!"

"சொல், சிவகாமி! ஆனந்தமாய்க் கேட்கிறேன். ஆனால் குண்டோதரன் திரும்பி வருவதற்குள் சீக்கிரமாய்ச் சொல்லிவிடு! பீடிகையிலேயே காலத்தைப் போக்கி விடாதே!" என்றார் நரசிம்மர்.

சிவகாமியின் வார்த்தைகள் அவருடைய மனதை உண்மையில் பெரிதும் கனிவித்திருந்தன. ஆயினும், அவர் வேண்டுமென்றே விளையாட்டுத் தோரணையில் பேசி வந்தார்.

"ஆமாம்; அவசரமாகத்தான் சொல்லியாக வேண்டும். இந்த மாதிரி தங்களுடன் தனியாகப் பேசும் சந்தர்ப்பம் மறுபடியும் எப்போது கிடைக்குமோ, அறியேன்; எப்போதாவது கிடைக்குமா என்பதும் தெரியாது! சொல்லுகிறேன், கேளுங்கள்:

நான் சின்னஞ் சிறு பெண்ணாயிருந்த போது, என் தந்தையின் செல்வக் கண்மணியாய் வளர்ந்து வந்தேன். அரண்யம் சூழ்ந்த சிற்ப அரண்மனையிலே நான் ராணியாயிருந்து தனி அரசு செலுத்தினேன். என் தந்தையிடம் சிற்ப வேலை கற்றுக் கொண்ட சீடர்கள் எல்லாரும் என்னிடம் பயபக்தி விசுவாசம் கொண்ட பிரஜைகளாயிருந்து வந்தார்கள். கண்ணிமையை அசைத்தால் போதும்; அவர்கள் அவ்வளவு பேரும் விரைந்து ஓடி வந்து 'என்ன பணி?' என்று கேட்பார்கள். அப்போதெல்லாம் எனக்குக் கவலை என்பதே தெரியாது; துன்பம் என்பதையே அறிந்ததில்லை. ஒரே குதூகலமும் விளையாட்டுந்தான்.

உலகத்திலே எதைப் பார்த்தாலும் எனக்கு வியப்பும் மகிழ்ச்சியுமாயிருக்கும். காலையிலே எழுந்ததும் தகதகவென்று பிரகாசித்துக்கொண்டு உதயமாகும் தங்கச் சூரியனைக் கண்டு ஆனந்திப்பேன். மாமரங்களில் துளிர்த்திருக்கும் இளஞ் சிவப்பு நிறத் தளிர்களைக் கண்டு களிப்படைவேன். மரம் செடி கொடிகளில் புஷ்பிக்கும் விதவிதமான வர்ண மலர்கள் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சியை அளிப்பதுண்டு. செடி கொடிகளுக்கு மத்தியில் ஆடிக்கொண்டே பறக்கும் பட்டுப்பூச்சிகளை ஓடிப் பிடிக்க முயல்வேன். அவை என் கையில் அகப்படாமல் தப்பித்துக் கொள்ளும்போது கலீரென்று சிரிப்பேன். மது உண்ட வண்டுகளின் ரீங்காரத்தைக் கேட்கும் போது எனக்கும் ஆனந்த போதை உண்டாகி விடும். காட்டுப் பறவைகள் இசைக்கும் கீதத்தைக் கேட்டு நான் பரவசமடைவேன்.

இரவிலே வானத்தை நோக்கினேனானால், மின்னும் நட்சத்திரங்களெல்லாம் தங்களுடன் வந்து சேரும்படி என்னைக் கண் சிமிட்டி அழைப்பது போலத் தோன்றும். அவற்றின் அழைப்புக் கிணங்கி நானும் கிளம்புவேன். சில சமயம் சந்திரனைப் பார்த்தால் எனக்கு அன்னப் பட்சியைப் போலிருக்கும். அதன் மேல் ஏறிக் கொண்டு நட்சத்திரங்களுக் கிடையே வட்டமிட்டுக் கொண்டிருப்பேன். சில சமயம் நிலாமதியானது ஒரு அழகிய சிறு தோணியைப் போல் எனக்குத் தோன்றும். அதன் மேல் ஏறிக் கொண்டு வானமாகிய நீலக் கடலில் மிதந்து வருவேன். வழியிலே தென்படும் நட்சத்திரச் சுடர் மணிகளையெல்லாம் கை நிறைய அள்ளி அள்ளி மடியிலே கட்டிக் கொள்வேன்.

இப்படிக் குதூகலமாகக் காலம் போய்க் கொண்டிருக்கையில் என் தந்தை எனக்கு நாட்டியக் கலை கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். அதுமுதல் எனக்கு அந்தக் கலைப் பைத்தியம் பிடித்து விட்டது. சதா சர்வ காலமும் நாட்டியமாடிய வண்ணம் இருந்தேன். காட்டுக்குள் விளையாடப் போனால் ஆடிக்கொண்டே போவேன். தாமரைக் குளத்தில் குளிக்கப் போனால் என் கால்கள் ஜதி போட்டுக் கொண்டு போகும். அப்போதெல்லாம் பூமியும் வானமும் ஒரு பெரிய நடன அரங்கமாகவே எனக்குத் தோன்றியது.

தடாகத்தில் வன்னத் தாமரைகள் தென்றற் காற்றில் அசைந்தாடும் போது அவை நடனமாடுவதாகவே எனக்குத் தோன்றும். வான வெளியில் விண் மீன்கள் ஜதி போட்டுக் கொண்டு போவதாகத் தோன்றும்.

இப்படி ஆனந்த வெள்ளத்தில் மிதந்து என் வாழ்க்கை நடந்து கொண்டிருந்த காலத்திலேதான் தாங்கள் முதன் முதலில் எங்கள் அரண்ய வீட்டுக்கு வந்தீர்கள்!......" என்று கூறிச் சிவகாமி நிறுத்தினாள்.

Happy & clean Shaves with

Vita

MADE IN
FINEST SURGICAL STEEL

Vita BLADES

விடா ப்ளேட்கள் மிக நேர்த்தியான சர்ஜிகல் எஃகினுல் எலெக்ட்ரோ உஷ்ண மானியால், கெட்டியாகவும், நல்ல டெம்பருடனும் மெல்லியதாகவும் செய்யப்பட்டு மும்முறை பரிசோதிக்கப்பட்டது.

கண்ட்ரோல் விலைக்கு
எங்கும் விற்கப்படுகிறது.

**NEW YORK TRADING CO.,**
**FORT : BOMBAY.**

# தி இந்தியன் பாங்க் லிட்.,



தென்னிந்தியாவின்
தலைசிறந்த பாங்க்

தலைமை ஆபீஸ்:
மதராஸ்.



பம்பாயிலும் சென்னை மாகாணம் பூராவும் பிராஞ்சுகள் உள்ளன.

வழங்கி வாக்களிக்கப்பட்ட

| | | |
|---|---|---|
| மூலதனம் | ... ரூ. | 60,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | | 33,48,561 |
| ரிஸர்வ் பண்டு | ... ரூ. | 32,00,000 |
| டெபாஸிட்டுகள் | ... ரூ. | 9,91,53,000 |

N. கோபால அய்யர், செக்ரடரி.

NPB 102 TM.

# துஷ்டர்களுக்குத் திருப்தி எது?

## சக்க்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

வனவாசத்தி லிருந்த பாண்டவர்களைப் பார்த்து விட்டுத் திரும்பி வந்த ஒரு பிராமணன் அஸ்தினபுரத்துக்கு வந்து, திருதராஷ்டிரன் செய்த மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு பாண்டவர்கள் இருந்த நிலைமையைப் பற்றி அரசனுக்கு விவரமாகச் சொன்னான். காற்றிலும் வெய்யிலிலும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த ராஜகுமாரர்களைப் பற்றி பிராமணன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் இத்தகைய அனர்த்தத்துக்குத் தான் காரணமானதை எண்ணித் துயரமடைந்தான்.

யுதிஷ்டிரன் கட்டளைக்கு அடங்கி பீமன் எவ்வளவு காலம் தன் கோபத்தைத் தடுத்துக் கொள்வான்? என்றைக்காவது ஒரு நாள் பாண்டவர்களுடைய கோபம் கரை உடைந்து பிரவாகமாகப் புரண்டோடும் என்பது திருதராஷ்டிரனுடைய பயம்.

“அருச்சுனனும் பீமனும் நம்மை நிச்சயமாகத் தண்டிப்பார்கள். சகுனியும் கர்ணனும் துரியோதனனும் மந்த புத்தியுள்ள துச்சாதனனும் கொம்புத் தேனுக்காக மரத்து நுனியில் ஏறி விட்டு அங்கே தொங்குகிறார்கள். கீழே பீமனுடைய கோபம் என்கிற படுகுழி அவர்களுடைய நாசத்திற்காக வாய்திறந்து காத்திருப்பது அவர்களுக்குத் தெரியவில்லையே” என்று அரசன் ஏங்கினான்.

“ஐயோ! என்ன காரணத்தினால் பேராசைக்கு ஆளானோம்? நமக்கு ஒரு குறையுமில்லாதிருக்க ஏன் இவ்வாறு செய்தோம்? எதற்காக அநீதியிலிறங்கினோம்? இருக்கும் பொருளை நல்ல வழியில் செலவு செய்து சுகமாக இருக்காமல் துராசைப் பட்டோம். நாம் செய்த பாவம் தன் பயனைத் தராமல் போகாது. தனஞ்சயன் இந்திர லோகம் சென்று திவ்யாஸ்திரங்களைப் பெற்றுத் திரும்பி வந்திருக்கிறான். சரீரத்தோடு சுவர்க்கம் சென்று அருச்சுனன் திரும்பி வந்திருக்கிறான். எங்கள் பேரில் பழி வாங்க வேண்டும் என்றல்லவோ இவ்வாறு செய்திருக்கிறான்? இல்லாவிடில் எந்த மனிதன் இந்திர லோகம் அடைந்தும் அதை விட்டுவிட்டுத் திரும்புவான்?” என் றிவ்வாறெல்லாம் எண்ணி எண்ணித் திருதராஷ்டிரன் சிந்தையில் ஆழ்ந்தான்.

* * *

திருதராஷ்டிரன் இவ்வாறு கவலைப்பட்டான். ஆனால் சகுனியும் கர்ணனும் துரியோதனனும் கவலைப்படவில்லை. அவர்கள் போக்கே வேறாக இருந்தது. நல்ல அதிருஷ்டம் அடைந்தோம் என்று அவர்கள் ஒருவரை ஒருவர் புரோத்சாகப் படுத்திக் கொண்டு மகிழ்ந்தவர்களாக இருந்தார்கள். “யுதிஷ்டிரனிடத்தில் ஜொலித்துக்கொண்டிருந்த ராஜ்ய லக்ஷ்மி, எங்களிடம் வந்து விட்டது. இனி பொறுமையால் நாம் வாடி வதங்க வேண்டியதில்லை. இதற்கெல்லாம் உன் கூர்மையான புத்தியே காரணம்” என்று கர்ணனும் சகுனியும் துரியோதனனுக்குச் சொன்னார்கள். இதைக் கேட்ட துரியோதனன், “கர்ணா! நீ சொல்லுகிறதெல்லாம் உண்மை. பாண்டவர்கள் கஷ்டப்படுவதை என் கண்ணால் பார்க்க வேண்டுமே! நம்முடைய சந்தோஷத்தையும் அவர்கள் பார்க்க வேண்டும். பகைவர்களுடைய கஷ்டத்தை நாம் கண்ணால் நேரில் பார்த்தாலல்லவோ நம்முடைய மகிழ்ச்சி பூர்த்தி அடையும்.



இதற்கு என்ன செய்யலாம்? வனத்திற்குப் போய்ப் பாண்டவர்களைக் காண வேண்டும். ஆனால் அரசர் இதற்கு அனுமதி தரமாட்டார்" என்று சொல்லி வருத்தப்பட்டான்.

"நம்மை விடப் பாண்டவர்கள் தவவன்மை பெற்றிருப்பதாக எண்ணி அவர்களைக் கண்டு அரசர் பயப்படுகிறார். வனம் சென்று பாண்டவர்களைச் சந்தித்தால் ஏதோ ஆபத்து நேரிடும் என்று எண்ணி அனுமதி தரமாட்டேன் என்கிறார். திரௌபதியும் பீமனும் அருச்சுனனும் ஆரணியத்தில் கஷ்டப்படுவதைப் பார்க்காமலிருந்தால் இவ்வளவு செய்தும் என்ன பிரயோஜனம்? வெறுமனே இவ்விடம் ராஜ்யலாபம் பெற்றுச் சுகமாக இருப்பதில் நான் திருப்தி அடையவில்லை. வனத்துக்குப் போய்ப் பாண்டவர்களைப் பார்க்க, திருதராஷ்டிரருடைய அனுமதியைப் பெற நீயும் சகுனியும் எப்படியாவது ஒரு வழி தேடவேண்டும்" என்று துரியோதனன் கர்ணனை வேண்டிக் கொண்டான்.

மறுநாள் காலை, கர்ணன் வெகு சீக்கிரமாக எழுந்து துரியோதனனிடம் வந்தான். கர்ணனுடைய முகத்தில் சந்தோஷக்குறியைக் கண்டு துரியோதனன் என்னவென்று விசாரித்தான். "உபாயம் கண்டேன். துவைத வனத்தில் நம்முடைய இடைச்சேரிகள் இருக்கின்றன. அந்தப் பசுக் கூட்டங்களை எண்ணிக் கணக்கெடுத்து இடையர்களையும் விசாரித்து வரவேண்டியது நம்முடைய கடமை. புராதனமாக இவ்வாறு நடைபெற்று வருகிறது. அதை வியாஜமாக வைத்துக் கொண்டு அரசர் அனுமதியைப் பெறலாம்" என்று கர்ணன் சொன்னதும் துரியோதனனுக்கும் சகுனிக்கும் அளவற்ற சந்தோஷமுண்டாயிற்று. "நல்ல உபாயம்! நல்ல உபாயம்!" என்று ஒருவருக் கொருவர் கைகொடுத்துச் சிரித்து மகிழ்ந்தார்கள்.

இடையர்களின் தலைவனுக்குச் சொல்லியனுப்பி அவனுடனும் பேசி முடித்தார்கள்.

* * *

"பசுக்கள் தயாராக இருக்கின்றன. வனத்தில் அழகிய இடத்தில் எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறோம். ராஜகுமாரர்கள் வந்து கால்நடைகளின் வயது, நிறம், ஜாதி, பெயர் இவைகளைப் பார்த்து வழக்கம்போல் கணக்கெடுத்துக் குறித்துக் கொண்டு கன்றுகளுக்கு அடையாளமுமிட்டு வனத்தில் வேட்டையாடிக் கோஷ யாத்திரை முடித்துக் கொண்டு நகரம் திரும்பலாம்" என்று இடையர் தலைவன் திருதராஷ்டிரனிடம் விண்ணப்பம் செய்தான். ராஜகுமாரர்களும் "இதற்கு அனுமதி தரவேண்டும்" என்று தகப்பனை வற்புறுத்தினார்கள்.

திருதராஷ்டிரன் ஒப்பவில்லை. "ராஜகுமாரர்களுக்கு வேட்டை நல்லதுதான். பசுக்களைப் பரிசீலனை செய்வதும் நல்லதே. ஆனால் இந்த வனத்தில் பாண்டவர்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவ்விடம் நீங்கள் செல்வது சரியல்ல. கோபத்துக்குக் காரணம் இருக்கும் காலத்தில் அந்த பீமார்ஜுனர்களிடம் உங்களை அனுப்ப நான் சம்மதிக்க மாட்டேன்" என்றான்.

"நாங்கள் அவர்கள் இருக்குமிடம் போகமாட்டோம். மிகவும் ஜாக்கிரதையாக இருப்போம்" என்றான் துரியோதனன்.

"நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் அபாயம் உண்டாகும். வனவாசத்தினால் வருத்தமடைந்திருக்கும் பாண்டவர்கள் இருக்குமிடத்திற்கு நீங்கள் போவது சரியல்ல. உங்கள் பரிவாரத்தில் யாராவது ஒரு போர்வீரன் பாண்டவர்கள் இருக்குமிடம் சென்று அறிவீனத்தினால் மரியாதைக் குறைவாக நடந்து கொள்வான். அதனின்று பெரும் கலகம் நேரிடும். வேறு யாராவது உங்களுக்காகப் போய்ப் பசுக்களை எண்ணும் காரியத்தை முடித்துவிட்டு வரலாம்" என்றான் அரசன்.

சகுனி, "அரசனே! யுதிஷ்டிரன் தருமத்தை அறிந்தவன். சபையில் பிரதிஜ்ஞை செய்திருக்கிறான். பாண்டவர்கள் அனைவரும் அவன் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நிற்பார்கள். நம்மிடம் குந்தி புத்திரர்கள் கோபத்தைக் காட்டமாட்டார்கள். வேட்டையில் பிரியமுள்ள துரியோதனனைத் தடுக்க வேண்டாம். வழக்கம்போல் பசுக்களைப் பரிசீலனை செய்து வரட்டும். நானும் கூடப்போய்ப் பார்த்துக் கொள்ளுகிறேன். வனத்தில் பாண்டவர்கள் இருக்கும் இடத்திற்கு நாங்கள் யாரும் போகமாட்டோம்" என்று வாக்குறுதி செய்து அனுமதி கொடுக்கும்படி கேட்டுக் கொண்டான்.

"சரி, இஷ்டப்படி செய்யுங்கள்!" என்றான் அரசன்.

* * *

துவேஷம் கொண்ட உள்ளத்துக்குத் திருப்தி என்பது கிடையாது. எரியும் தீயைப்போல் இரை போடப் போட இன்னும் பெரிதாக எரிந்து கொண்டு, "போதாது, போதாது!" என்று கேட்டுக் கொண்டேயிருக்கும்.



பரிசுக் கதை

# பாய்ச்சல் மாடு

சி. அனந்தவிஜயம்



1

"இந்தப் பாழாய்ப் போன போட்டிக்கு என்னுங்கறேன்? நீங்கள் போக வேண்டாம்! உங்க திறமையைத்தான் எனக்கு நன்றாய்த் தெரியுமே! ஒருவரும் உங்களை இந்தப் பனையூர் வட்டத்துக்குள்ளே மிஞ்ச முடியாது. அப்படி இருக்கச்சே, நீங்க எதுக்குப் போறதுங்கறேன்? வேண்டாம், வேண்டாம்! நமக்குத்தான் எங்கே நின்னு இருக்கே சனி!" என்று ஆசையுடனும், அன்பு குழைந்த வணக்கத்துடனும் கூடிய குரல், அந்த வாழைக் கொல்லையிலிருந்து வருகிறது.

"இந்தா, முருவு! நான்தான் சொல்றேன்: என்னதான் இருந்தாலும், இந்தக் கருப்பனுடைய புலியை நான் பிடிக்காட்டி, எனக்குப் பயந்து கிடந்த இந்த வேலு, பிச்சை, சப்பாணி — இந்தப் பசங்களுக்கு ஏகத்தாளமாய்ப் போயிடுச்சன்னு......நான் இந்த உசிரை வச்சிருக்கிறதைக் காட்டிலும், பூ! மடிஞ்சுடலாமே" என்றான் நாகப்பன்.

"ஹூம்! இந்தப் பசங்கள் மெச்சிக்கிட்டுத்தான் ஆயிடப் போறதாக்கும்! என்னமோ கேடாக அந்த முரட்டு சென்மம் பாஞ்சிடுச்சின்னுக்கா, என்னாச்சும் ஆயிடுச்சு, எனக்கு யாரிருக்கா?" என்று முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள் முருவாயி.

என்ன இருந்தாலும் நாகப்பனா கேட்பான்? அவன்தான் பாய்ச்சல் என்றால் "எங்கே?" என்று துடிக்கிறானே! எத்தனையோ பாய்ச்சலுக்குப் போய் அடங்காததெல்லாம் பிடித்து அடக்கி விட்டான்! இருந்தாலும் இந்தக் காட்டுப் புலின்னு அவனுக்கே கொஞ்சம் பயம் இருக்க

லாம். என்ன இருந்தாலும் அவனுடைய பழைய அனுபவங்கள் அவனுக்கு உதவி செய்யாமல் போகுமா?

“என்ன முருவு! இப்படிப் பைத்திய மாட்டம் அழுவுறே? எனக்குப் பயமில்லே! பயப்படாதே! எப்படியாச்சும், அந்தக் காட்டுப்புலியைப் புடிச்சி, அடக்கிப்புடறேன். பார்க்கிறயா? நம்ம வீட்டுக் கொட்டில்லேயே கட்டறேன்” என்றான் நாகப்பன்.

அதோ! வாழை மரங்களினூடே கதிரவனின் பொன்னிறக் கிரணங்கள் பட்டுப் பிரதிபலிக்கின்றன; நாகப்பழம் போன்ற அந்தப் பெண்ணின் உருவத்தில் பட்டுத் தான். அவள்தான் முருவாயி.

“நாகப்பா எப்படியும் அந்தக் காட்டுப் புலியைப் புடிச்சிடும். இருந்தாலும் செல்லியாத்தா! நீதான் ஒன்றும் இசை கேடாகாத படி பார்த்துக்கணும்! நான் பூ முடிக்கணும்னு, உம் பிள்ளை, என் புருசன் செயத்தோடே வரணும்மா, தாயே! உனக்குப் பால் பன்னையம் போடறேன்” என்று கும்பிட்டுவிட்டு, ‘பூ ...... ம் ...... பூம்’ என்று அடுப்பை ஊதினாள் முருவாயி.

2

காலையில் எழுந்தவுடன் முருவாயி உடம்பெல்லாம் மஞ்சள் பூசிக் குளித்துவிட்டாள். நெற்றியின் நடுவே, காலைக் கதிரவன்போல் செக்கச் செவேலென்றிருந்த குங்குமப் பொட்டு! உலர்ந்து உலராத கூந்தலை அள்ளிச் செருகி யிருந்தாள். அதனுள்ளிருந்து, இரண்டு பிச்சிப்பூவும், சிவந்திப் பூவும் காட்சியளித்தன. அவள் பட்சி போல் இங்குமங்கும் குதித்துக் குதித்து உல்லாசமாகப் பாடிக்கொண்டு நடந்தாள்.

அவளுக்கு என்ன பெருமிதமோ! அந்தப் பண்ணையூர் ஜில்லாவுக்குள்ளேயே தன் புருஷன் நாகப்பனை அசைக்க முடியாது என்ற நம்பிக்கையா, அல்லது பாய்ச்சல்கார நாகப்பனைப் புருஷனாய் அடைந்துவிட்டோமென்ற இறுமாப்பா?

எதுவாயினும் அவள் தன் வீட்டை விட்டு, அண்டை அயல் வீட்டுக்குப் போய்ப் பேசியதை நான் அறியேன். இந்தக் கிராமத்திலேயே முருவாயி என்றால் எல்லாப் பெண்களுக்கும் கொஞ்சம் பொறாமை. அழகிலும் சரிதான், அவள் அடைந்த இடத்திலும் சரிதான்! நாகப்பன் அவளது மனம் நோக எதையும் செய்யமாட்டான்.

“அவங்க சண்டைபோட்டு நான் பார்த்ததில்லே” என்று அக்கசடி அமிர்தம்கூடப் பொறாமைப் பட்டிருக்கிறாள்!

நாகப்பனுடைய உடல் வலிமையைக் கண்டால் நாட்டாண்மைக்காரனுக்குக்கூடக் கொஞ்சம் நடுக்கம்தான். மற்ற வேலு, பிச்சை, சப்பாணி, வீரண்ணன் முதலியவர்களுக்கு ரொம்பப் பொறாமை!

3

“அந்தக் குட்டி முருவாயியைக் கடத்திக்கிட்டுப் போயிடணும், அண்ணே!” என்று எத்தனையோ தடவை எச்சிலூறிக் கொண்டே சப்பாணி, கையில் கலயம் இருக்கும்போது, நிலைதவறிப் பேசி யிருக்கிறான்.

“அவ தளுக்கென்ன, மினுக்கென்ன! அஞ்சு வருசமாயும் கூட சேத்துக் கட்டிக் கிட்டு வந்ததுபோல் கட்டுவிடாத கட்டையா யிருக்காடா!”

“இரண்டு புள்ளையைச் சாகக் கொடுத்துக்கூடக் கல்லுக்குண்டாட்டம் இருக்காடா!”

“டேய்! அவ மனுசி இல்லேடா, தெய்வப் பொறப்புடா!” என்று விரசம் கலந்த பல பேச்சுக் குரல்கள்.

அதோ! அரச மரத்தடியில் மொச்சைக் கொட்டை தின்று கொண்டே பேசுகிறார்கள்.



“சரிதான்! பொர்ணமி அன்னைக்கு, ஏதோ பாய்ச்சல் புடிக்கப் போறாங்களாமே; அது யாருது? என்ன மேம்பர்தயம்? எந்த ஊருக் காளை?” என்று கேட்டான் வீரண்ணன்.

“ஆமாண்டா, நம்ப கருப்பண்ணன்




வச்சில்லே, பெரிச—காக்கேயத்துக் காளே! அதைத்தான் 350 கட்டிப் பிடிக்கருக்க."

"பூ, இந்த 350 ரூபாய்க் காளிக்கு... அதை அந்தக் காளியிடமிருந்து பிடிக்கு வதைக் காட்டிலும், 'கம்'மென்று இருக்கிறது மேல்டா. அப்படிக் கெட்ட பெயர் வந்தாலும் பரவாயில்லே. உசிருக்கு மிஞ்சி யாடா?" என்றான் சப்பாணி.

காட்டாண்மைக்காரன், "எனக்கு வயசா யிடுச்ச ...... இல்லேன்னு, வீராசாமிக் காளையை விடவா இந்தக் கழுதை? அதையே, இந்த எருக்கங் காட்டிலே புடிச்சு ஓடி ஓடின்னு ஓடிச்சு, நிறை அடிச்சுட்டேன்" என்று பல பழைய நினைவுகளுக்கு மெருகு கொடுத்து நிறுத்தினான்.

"எனக்குக் கலியாணமாயிடுச்சு. இல்லேன்னு, போன வருசம் புடிச்ச வைத்திக் கடாவை விடவா?" என்று தன்னுடைய ஆற்றுமையைக் கூறிக்கொண்டான் பிச்சை.

வீரண்ணன், "என்னடா! கலியாணமாயிடுச்சு என்கிறே? அந்த நாகப்பன் பயல் கலியாணம் பண்ணிக்கிலேயோ? அவன் தாலி கட்டி இரண்டு மாசத்திலே, செய்யூர் சோமசுந்தரத் தேவருடைய காளையைப் பிடித்துக் கொட்டிலில் கட்டி விட்டான்! ஏது, இந்தக் குட்டி முருவாயாட்டம், உம் பொஞ்சாதி மூக்காத்தா இருந்தான்னு, அப்புறம் எழுந்திருக்கவே மாட்டே போலிருக்கே!" என்றான்.

"அவனுக்கு எங்கேதாண்டா தைரியம் வச்சிருக்கான்?" என்றான் பிச்சை ஆச்சரியத்தோடு.

"ஆ, அது முடியாதுடா! சும்மாச் சும்மாச் சுகம் கிடைக்குமா? பேசாமே, பெண்டாட்டியும், புள்ளேயுமா இருந்தாப் போச்சு! இல்லேன்னு, பயல் பாடு அதோகதிதான்" என்று ஞானி போல் பேசினான், இரண்டு மொந்தை போட்ட சுப்பன் — புதிய மெம்பர்.

"அவன் அப்படிச் செய்தான்னு, அவன் பொஞ்சாதிக்குப் புருசனில்லே; புருசனுக்கு அவ பொஞ்சாதி யில்லே. ஆனால்......பைய, ராம்ப புடிச்சுப் போட்டுக்கிட்டா போவுது" என்றான் காட்டாண்மைக்காரன்.

கூட்டத்தில் ஒரே சுரகோஷம், சிரிப்பு; கலயங்கள் உருளுகின்றன.

அரச மரத்து இலைகள், காற்றினால் 'ஓ' வென்று அலறுகின்றன.

4

அதோ, வருகிறவன்தான் நாகப்பன்! ஆ! என்ன தேகக் கட்டு! ஏதாவது அரச குடும்பத்தைச் சேர்ந்தவனோ என்னமோன்னு நினைத்தேன். இவன் புடிச்சிடுவான், புடிச்சிடுவான்,—அந்தக் காட்டுப் புலியை! முருவாயிக்கு ஏற்ற கணவன்தான்.

காலைக் கதிரவனைக் கைகூப்பித் தொழுதான். குளித்தாகி விட்டது. நெற்றியில் நீறுபூச்சு! என்ன பக்தி! என்ன பலம்! தமிழ் மகனே! நீ தமிழ்க் குமரிக் கேற்ற கணவன்தான்.

அதோ! செல்லியாத்தா கோயில்; காகங்கள் கத்துகின்றன; சிட்டுக் குருவிகள் அங்கும் இங்கும் பறந்து திரிகின்றன. மதுரை வீரன் சிலை இதோ! இது பேச்சியாயி! இது சப்பாணி! இது முனியாண்டி! இது கருப்பண்ணன்! அதோ, குட்டித் தெய்வங்களின் நடுவில்—அதுதான் தாய் செல்லியாத்தா.

"தாயே! எனக்கு இவ்வளவு நாளும் இருந்து செயத்தைக் கொடுத்தே! இன்னைக்கும் அப்படியே என்கூட இருந்து, செயத்தைக் கொடுக்காட்டா, என் உசிரு எனக்கில்லே! என்னமோ, அந்த முருவு நல்ல மஞ்சள் பூசிக் குளிக்கணும்னு ஆசைப் பட்டா, என்னைக் காப்பாத்து" என்று கண்ணீர் பெருக வேண்டி நின்றான் நாகப்பன்.

5

நீட்டுக் கம்புக்கு மூட்டுக் கொடுத்துக் கொண்டு, ஒற்றைக் காலில் நிற்கிறான்

முருவாயி. அதோ, செல்லிமேட்டுப் பனை யருகில் ஒரு தலை தோன்றுகிறது.

இவள் உள்ளத்தில் மகிழ்ச்சி.

சூரியன் கிழக்கே அடிவானத்திலிருந்து ஏறிக்கொண்டு இருக்கிறான்; தெற்கே நாகப்பன் செல்லி மேட்டின்மீது ஏறுகிறான்.

முருவாயியின் கால்கள் துடிக்கின்றன; கால் விரல்கள் நெளிகின்றன. ஏன், முன் பாக ஓடி, எதிர் கொண்டழைக்கத்தான்.

"ஏன் ரொம்பக் களைப்பா? முன்னே புடிக்க பார்க்கிறேன். அவரு, அந்த மேட்டை உட்டு இறங்கக் காணோமே! ரொம்ப மெள்ள, மெள்ள நடந்து வாரே!" என்று கவலை கொள்கிறாள் முருவாயி.

"உஸ்! அப்பாடா! முருவு, தண்ணி கொண்டா."

"இதோ! கால் கழுவிக் கொள்ள வாங்கோ! களியாக்கி இருக்கேன்; உங்களுக்குப் புடிக்குமில்லே" என்று தலையை முன்னும் பின்னும் அசைத்துக் கோணிக் கொண்டே உள்ளே ஓடினாள் முருவாயி.

"அப்பாடா! இனிமேல் என்னால் சாப்பிட முடியாது. போதும், போதுங்கறேன், சும்மா கேக்காம போடறியே...ஏ...ய்ய்" என்று திருப்தி ஏப்பம் விட்டான் நாகப்பன்.

"சரி, வெத்திலே போட்டுக்கிட்டீங்களா? ......அதிருக்கட்டும், இன்னிக்கி ராவு, கழுத்திலே மாலையெல்லாம் போட்டுகிட்டு, பெரிய ராசாவாட்டம் வருவீங்க, அல்ல?" என்றாள் முருவாயி.

"நான் ராஜான்னு, நீ ராணி ... ஊம் ... சரிதானே?" என்றான் நாகப்பன்.

கடைக் கண்ணோக்கி, கன்னத்தில் கை வைத்த வண்ணம் அவன்மேல் சாய்ந்து விட்டாள் முருவாயி. அவனது கை விரல்கள், அவளது கூந்தலைக் கோதுகின்றன. அவளது கரம், அவனது இள மீசையை முறுக்குகிறது.

"ஹெக்......ஹெக்......ஹெக்" என்று கவுளி அடிக்கிறது.

எங்கே? எத்திசையில்?

"சரி, அந்தக் கச்சையை எடு, சல்லடத்தை எடு......எல்லாம் போட்டுக் கிட்டாச்சல்லே" என்றான் நாகப்பன்.

## 6

இடுப்பில் சல்லடம், கச்சை, இரு புயங்களிலும் புலித்தோல். மார்பின் குறுக்கே சிறுத்தையின் தோல் கட்டியாகி விட்டது. கையில் செல்லியாத்தா பெயரைச் சொல்லி, ஏதோ மஞ்சள் துணியைக் கட்டுகிறாள் முருவாயி. நரிக் கொம்பு, புலிப் பல், கழுத்தில் காட்சி யளிக்கிறது. தலை சீவிக் கொண்டை போட்டாகி விட்டது. கம்பளிக் கயிற்றையும், சிறு தடி ஒன்றையும் கையில் எடுத்துக் கொண்டான்.

குல தெய்வங்களான வீரப்பனையும், தாய் செல்லியாத்தாளையும் வணங்குகிறான்; முருவுவும் வணங்குகிறாள்.

முருவு அவனது பாதங்களில் விழுந்து வணங்கினாள். "இந்தாங்க, இதைச் சாப்பிடுங்க" என்று குவளையில் பால் கொடுத்தாள்.

பால் சாப்பிட்டாய் விட்டது; பாக்கு வெற்றிலையும் பக்குவமாய்ப் போட்டாய் விட்டது.

"கண்ணே முருவு! நான் போய் வரேன். பயப்படாதே! செல்லி இருக்கா. எல்லாம் பார்த்துக்குவா, நான் வரட்டுமா? ஊம்..."

கவுளியும் சொல்கிறது. என்ன சொல்கிறது? என்னவோ?

செல்லி மேட்டின் பள்ளத்தில் தலை மறைந்தது. பனை மரம் மட்டும் அப்படியே இருக்கிறது!

நாகப்பன் சென்று விட்டான். அவளது கண்களில் நீர் தேங்கி இருக்கிறது; என்னவோ, ஏதோ என்று கவலை.

## 7

ஆட்ட மென்றாலும் கூட்டம், பெரும் கூட்டம். மரத்தின் மேலெல்லாம் குரங்குகள் போல் ஜனங்கள் தொத்திக் கொண்டிருந்



தனர். கோவிலின் கோபுரத்தின் மேல் எல்லாம் கூட்டம்.

“டண், டணக்கு, டணக்குதான், டண், டண்” என்று பறை ஒலிக்கிறது.

வீரர்களின் வரிசை. அதோ, பெரிய சாமி, வேலுசாமி, மூக்கையன், சாமி யப்பன்! இதோ, நம் காகப்பனும்கூட.

இவர்களெல்லாம் எத்தனையோ பாய்ச்ச லுக்குப் போய், எத்தனையோ காளைகளை எல்லாம் அடக்கியவர்கள். எல்லாம் வெளி யூர் ஆசாமிகள். ஆனால் நம் காகப்பன் ஒருவன்தான் உள்ளூர் ஆசாமி.

மலை போன்று, பார்க்கக்கூட பயங்கர மான உருவத்துடன் கூடிய அந்தக் காளையை மிகவும் ஜாக்கிரதையாகப் பிடித்து வருகிறார்கள். அதுதான் கருப் பண்ணனின் காட்டுப்புலி; காங்கேயத்துக் காளை; கிரம்ப கறுகறுப்பு. திமிறுகிறது, சீறுகிறது; கொம்புகளிலெல்லாம் வரப்பை முட்டியதில் பட்ட சேறு ஒட்டிக் கொண் டிருக்கிறது. இரத்தக் கனல் கண்களி லிருந்து வீசுகிறது.

அவிழ்த்து விட்டால் போதும்...... அப்பா! அந்த ஊரே காலி!

அதோ, ஒன்றும் தெரியாத அப்பாவி ஆடு ஒன்று! தனக்கு சேரப் போகும் கதியைப் பற்றி எல்லாரிடத்திலும் முறையிடும் வகையில், ‘ம்பே...ம்பே’ என்று ‘கத்து கிறது.

ஆனால், அதை இங்கு யார் கவனிப் பார்கள்? எல்லாருடைய நோக்கமும் அந்தப் புலியின் மீதல்லவா இருக்கிறது! கல்யா ணிருந்தும் அந்தச் செல்லியம்மா கூட கவ னிக்கவில்லை.

“ திந்திணக்கனி ...... திந்திண ...... ” என்று சாமியை வருந்தி அழைத்துப் பம்பை அடிக்கிறார்கள்.

சாமி வந்து விட்டது. “ஹா......ஹா ...... கொண்டாடா ...... பலியை ...... ” என்று பயபவ வென்ற கத்தியுடன், குடுமி அவிழ, தலை அசைந்து ஓடி வருகிறான் பூசாரி.

“ம்பே ...... பே ...... ம்பே” என்று தனது இறுதி வேண்டுகோளையும் செலுத்தி விட்டது ஆடு.

மண்ணில் மண்டை. பீடத்தில் இரத்தம்.

விபூதி பூசியாகிவிட்டது. இரத்தக் கறை யைக் கையில் தடவிக் கொண்டார்கள், பாய்ச்சல்காரர்கள்.

காளை, “ஹூம், ஹூம், ஹூம்” என்று உறுமுகிறது. “யாவரையும் அழித்து விடு வேன்!” என்று பயமுறுத்துகிறது.

மனிதர்கள் அஞ்சுகிறார்கள்.

“டண்......டணக்கு......டணக்குதான்” என்று பறை ஒலி அதிருகிறது.

“ஆ!......ஓ......ஆ......ஓ, ஓ” என்ற சத்தம். “ஹூம், ஹூம்” என்ற பெரிய சீற்றலுடன் மண்ணைப் புரண்டிப் புழுதியை எழுப்புகிறது காளை.

ஆ! அதோ, அந்த முரட்டுக் காளை ஆக்ரோஷத்துடன் அந்த மதுரைவீரன் சிலையைக்கூட முட்டித் தள்ளிவிட்டது; கயிறு துணிக்கப்பட்டது; காளையும் விடு பட்டது.

ஒருவரும் அருகிலில்லை. பாய்ச்சல்கார ர்கள், தூரத் தூர இருந்து, காளையை அலைக்கழித்து மடக்குவதற்குப் பாவப் போட்டார்கள்.

ஜனங்களுக்குப் பயம்! காலரை மணி ஆகிறது. இரண்டு பாய்ச்சல்காரர்களுக்கு நல்ல காயம்! ரொம்பக் களைத்து விட்டார்கள். வேலுசாமியும், சாமியப்ப னும், பெரிய சாமியும் “இன் னைக்கு முடி யாது; வரும் பொழுதே சகு னம் சரியா யில்லே! இர ண்டு மணிக் குள்ளாக புடி படாத காளை யை, இன்னும் அரை மணிக் குள், எப்படிப் புடிக்க முடி யும்?” என்று விலகி விட் டார்கள்.

மூக்கையனும், காகப்பனும் தான் காளையைப் பிடிக்க முனைந்து நிற்கிறார்



கள். சிலர், "நாகப்பன் ஜயித்து விடுவான்" என்கிறார்கள்; பலர் மூக்கையன் ஜயித்து விடுவான் என்கிறார்கள்.

அதோ! மூக்கையன் கொம்புகளைக் குனிப் பிடித்து விட்டான். காளை அவனைத் தூக்குகிறது. கொம்புகளுக்கு இடையில் படுத்து விட்டான்; அது ஆட்டுகிறது. அவன் அதை அசைய விடவில்லை. கழுத்தைத் திருகுகிறான்; காளை மண்டி விட்டு விட்டது.

ஜனங்களின் ஆரவாரம். மூக்குக் கயிறையும் பிடித்து விட்டான். காளை படுத்து விடும் போலிருக்கிறது. கயிறுகளை எடுத்துக் கொண்டு, அருகில் அலையச் சென்றார்கள். மூக்கையனின் உடலில் ஒரே வியர்வை.

"மூக்கையனுக்குக் கெலிப்பு, கெலிப்பு!" என்ற ஓசை எங்கும் ஒலிக்கிறது.

நாகப்பனின் முகத்தில் ருத்ரதாண்டவம்! கண்களில் தீப்பொறி!

"நாம் காளையைப் பிடிக்கக்கூட இல்லை. இவ்வளவு பெருதோல்வியா?" என்று ஏங்கி, செல்லியம்மன் கோவிலை வெறித்துப் பார்த்தான்.

கையில் பிடிமண்ணை எடுத்துத் தேய்த்தான்.

ஆ! அந்தக் காளையும் திமிறிக்கொண்டு ஓடி வருகிறது. எல்லோரும் கயிற்றைப் போட்டுவிட்டு ஓடுகிறார்கள்!

மூக்கையன், குளக்கரையிலுள்ள அரச மரத்து வேர்களுக்கு இடையில் தலைகீழாகக் கிடக்கிறான்.

நாகப்பனையே ஜனங்கள் கூர்ந்து கவனிக்கிறார்கள். அவர்களின் முழுக் கவனமும் நாகப்பனின் மீதுதான்.

"இப்பொழுது நாகப்பன் ஜயிப்பான்; இன்றேல் காளை நாகப்பனைத் தீர்த்து விடும்" என்று ஜனங்கள் பேசிக் கொள்ளுகிறார்கள்.

அதோ! நாகப்பன் அந்தக் காளையை நோக்கி ஓடி வருகிறான். ஆ! ஆ! காளையும் பாய்வதற்கு ஆயத்தமாகத் தலையைக் கீழே போட்டு விட்டது.........



குடிசையுள் எரியும் விளக்கின் ஒளி, முருவாயியின் நீர் தேங்கிய கண்களில் பிரதிபலிக்கிறது. இடை யிடையே பெருமூச்சு. எதிரேயுள்ள வீரப்பனை வணங்குகிறாள்.

ஒவ்வொரு நிமிஷமும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு, என்னமோ, ஏதோ என்று புழுங்குகிறது அவளது மனசு.

ஏதோ சற்றுத் தூரத்தில் கேட்கும் ஒலி. சாமியை விட்டு வாயிலுக்கு ஓடி வந்தாள்.

அதோ! செல்லி மேட்டின் அடி வானத்தில் ஒரே புழுதிப் படலம்.

மாலைச் சூரியனின் மஞ்சள் கிரணங்கள் எதிரே உள்ள முருங்கை மரத்தில் பட்டு, முருங்கை இலைகளைப் பொன்னிற மாக்கின.

தட்டிக் கம்பைப் பிடித்துக் கொண்டு தெற்கே செல்லி மேட்டை நோக்குகிறாள். அவளது நிலையழிந்த கூந்தலின் இரண்டு மயிர்கள் காற்றின் அசைவினால் அவளது முகத்தில் ஊசலாடுகிறது.

ஒரு பச்சைக் கிளி ஒரு கோவைப் பழத்தைக் கௌவிக் கொண்டு செல்கிறது.

முருவாயியின் கண்களில் ஏக்கமும், கவலையும் தோன்றுகின்றன.

## 8

பாய்ந்தான் காகப்பன்; பாய்ந்தது காளை. அதனது பிடரியில், ஆ! ஆம், அவன் அமர்ந்து விட்டான். மூக்குக் கயிறைத் தனது கால் விரல்களால் உதைக்கிறான்; காளையின் கொண்டையைக் கையினால் இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறான்.

யாவரும் ஆச்சரியத்துடன், புது மாதிரியாக அவன் பாய்ந்த முறையைக் கண்டு வியப்புற்றனர்.

"புலிண்ணு, புலிதாண்டா! சம்ப பனையூருக்கு நல்ல பேருடா" என்று அங்குமிங்கும் பேச்சுகள் கிளம்புகின்றன. வெகு நாழிகை யாகியும் காளை அடங்கவில்லை; திமிறுகிறது.

காகப்பனின் உடம்பில் ஒரே வியர்வை வெள்ளம்; தோள்கள் வீங்கி விட்டனபோல் தெரிகின்றன. கீழே குதித்தான்.

காளை ஆக்ரோஷத்துடன் பாய்ந்தது. அதன் வயிற்றின் அடியில் புகுந்து, வாலைப் பிடித்து முறுக்கி இழுத்தான் காகப்பன். காளை காலை உதைத்துக் கொண்டு துள்ளித் திமிறி அவன் மேல் பாய்ந்தது.

இதோ! கொம்பையும் மூக்குக் கயிறையும் கூடப் பிடித்து விட்டான் காகப்பன். முறையே தாடையிலும், முகவாய்க் கட்டையிலும் சாறு குத்துக் கொடுத்து, மூக்குக் கயிறை உருவி விட்டான்.

காளை, "உம்...ஹா...அ" என்று மல்லாந்து விட்டது. காலேந்து இடி காதின் ஓரத்திலும், மூக்கிலும் இடித்தான்.

பிடித்தான் ஒரு கையில்; அவிழ்த்தான் பண முடிப்பை.

கச்சையில் பணம் செருகப்பட்டது; கயிற்றில் காளை கட்டப்பட்டது.

காகப்பனின் கழுத்தில் மாலை அணியப் பட்டது.

* * *

பௌர்ணமிச் சந்திரன் கிழக்கே எழுந்தான். செல்லி மேட்டின் அடிவானத்தில் காகப்பன் ஏறினான்.

பறை ஒலி எங்கும் கேட்கிறது. காட்டுப் புலி பசுபோல் அவன் பின்னே வீட்டை நோக்கி வந்தது.

தெருவில் கதவுகளிலிருந்தும், திண்ணையின் ஓரங்களிலிருந்தும், பல கண்கள் காகப்பனையே பார்க்கின்றன. அரசர் போல் வருகிறார் காகப்பர்!

துடியாய்த் துடிக்கிறாள் முருவு, தனது கணவனைக் காண — அவளது கண்களில் ஒளி வீசுகிறது; அகன்று நோக்குகின்றன, அரசன் காகப்பனை! கால் கழுவத் தண்ணீர், குவளையில் பால் — குத்துவிளக் கேற்றிக் கைகூப்பித் தொழுதாள்.

குடிசையின் முன் காகப்பன். கொட்டிலுக்குள் காட்டுப் புலி.

தெருவில் பெண்களும், ஆண்களும் காகப்பனையே கவனிக்கிறார்கள்.

முருவாயி ஆவலுடன் காகப்பனைத் தழுவி நின்றாள். பரந்த மலைமேல் ஒரு பாம்பு நெளிவது போலிருக்கிறது, பூரித்த தோள்களும், திமிர்ந்த மார்பும் படைத்த காகப்பனின்மேல் முருவாயி சாய்ந்திருப்பது.

அதோ, நாட்டாண்மைக்காரனின் பொறாமை விழி! இதோ! செல்லியம்மனுக்கு முன் பால் பள்ளையம் படைத்திருக்கிறது.

காகப்பனும், முருவாயியும் வணங்குகின்றனர்.

"அதோ பாருங்கடா!" என்றான் ஒரு குடம் கள் குடித்திருந்த குப்பன்.

# ஏகோபத்தியமாக

## அங்கீகரிக்கப்பட்டது

**ஸ்வஸ்திக்**
**பரிமள காஸ்டராயில்**




ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய். 15

451 NAS

செல்ஸ் டிப்போ: 158-B, பிராட்வே, ஜி. டி., மதராஸ்.



# குதிரையும் கலைமானும்

-கேசரி-

ஒரு காட்டில் ஒரு குதிரையுடன் ஒரு கலைமான் வெகு சிநேகமாய் இருந்தது. இரண்டும் ஒன்ருகவே கிளம்பிப் புல் மேயப் போகும். இந்த ஒற்றுமையைக் கண்டு நரிக்குப் பொறுக்கவில்லை. இரண்டுக்கும் நடுவில் துவேஷத்தை மூட்டிவிட வேண்டுமென்று தீர்மானித்தது.

ஒரு நாள் நரி, கலைமானும் குதிரையும் இருந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தது. "நரியாரே! சௌக்கியமா?" என்று இரண்டும் க்ஷேமம் விசாரித்தன.

"க்ஷேமந்தான்; ஆனால் எனக்கு ஒரு சந்தேகம். அதைத் தீர்ப்பீர்களா?" என்று நரி கேட்டது.

"சந்தேகத்தைச் சொல்லும்; முடிந்தால் தீர்க்கிறோம்" என்றது குதிரை.

"ஒன்றுமில்லை, உங்கள் இருவரில் யார் வேகமாக ஓடக் கூடியவர் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். என் எதிரில் இருவரும் கொஞ்சம் ஓடினால் போதும்" என்றது நரி.

நண்பர்கள் இருவரும் சம்மதித்தார்கள். பாவம்! அவர்களின் நட்பு முடியும் காலம் வந்து விட்டது என்பதை அவை அறியவில்லை.

ஓட்டப் பந்தயம் நடந்தது. முடிவில் குதிரைதான் ஜயித்தது. ஓடுவதில் தனக்கு நிகரில்லை என்று நினைத்துக் கொண்டிருந்த கலைமானுக்கு முதலில் மிகவும் அவமானமாயிருந்தது. பிறகு அதற்குக் குதிரையின்மேல் அடக்க முடியாத துவேஷம் ஏற்பட்டு விட்டது. அந்த நிமிஷமே இரண்டும் வெவ்வேறு திக்கை நோக்கி மேயச் சென்றன.

அதைக் கண்ட நரிக்கு ரொம்ப ரொம்ப சந்தோஷம். "இனிமேல் அவை ஒரு நாளும் ஒற்றுமையாயிருக்கப் போவதில்லை" என்ற மனத் திருப்தியுடன் அது மெள்ள நழுவி விட்டது.

சில நாட்களுக்குப் பிறகு, சற்றுத் தூரத்தில் குதிரை ஒரு மேட்டின்மேல் தனியாய் மேய்ந்து கொண்டிருந்தது. அதைக் கண்டதும் வந்த கோபத்தில் கலைமான் குதிரையை நோக்கி வேகமாய் ஓடிவந்து, தன் பலம் கொண்ட மட்டில் அதன் விலாவில் கொம்புகளால் குத்திற்று. இதைச் சற்றும் எதிர்பாராத குதிரை பள்ளத்தில் உருண்டு விழுந்தது. "உனக்குக் கால்கள் நீளமானதால் பந்தயத்தில் ஜயித்து விட்டாய். எனக்கு இருக்கும் நீளமான கொம்பினால் உன்னைக் குத்தினேன். முடிந்தால் நீயும் குத்துவாய்; ஆனால் உனக்குத்தான் கொம்பு இல்லையே!" என்று பரிகாசமாய்ச் சிரித்தது கலைமான். முதலில் கலைமானிடம்



யாதொரு விரோதமும் பாராட்டாத குதிரைக்கும் இப்பொழுது அதன் மேல் ஆத்திரம் உண்டாயிற்று.

ஆனால், அது அவசரம் அவசரமாக எழுந்து ஓடிவருவதற்குள் கலைமான் இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது.

சுமார் பத்து நாட்களுக்குப் பிறகு கலைமான் தலை தெறிக்கக் காட்டின் நடுவில் ஓடுவதைக் குதிரை பார்த்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு வேடன் வில்லும் கையுமாய் ஓடி வந்து, "இந்தப் பக்கம் மான் ஒன்று வந்ததைப் பார்த்தாயா?" என்று குதிரையைக் கேட்டான். அந்த க்ஷணத்தில் குதிரையின் மனத்தில் விபரீதமான பழி வாங்கும் எண்ணம் உதித்தது. உடனே வேடனைப் பார்த்து, "என் முதுகில் ஏறிக் கொள்ளுங்கள். "இரண்டே நிமிஷத்தில் அந்த மானைப் பிடித்துத் தருகிறேன்" என்றது. வேடனும் மெல்ல ஏறி உட்கார்ந்து குதிரையின் பிடரி மயிரைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டதும், குதிரை மான் போன வழியில் ஓடத் தொடங்கியது. களைத்துப் போயிருந்த கலை மானைப் பிடிக்க அதற்கு அதிக நேரமாகவில்லை. வேடனும் தன் கையம்பால் கலை மானைக் கொன்றான்.



'குடி வரும் குருவி:—இந்த வீடு எப்பொழுது பார்த்தாலும் இப்படித்தான் ஒழுகுமோ?

வீட்டுக்காரக் குருவி:—இல்லை, இல்லை! மழை பெய்யும் பொழுதுதான் ஒழுகும்!

மானைக் கொன்றதும் வேடன் அதைக் கையிலெடுத்துக் கொண்டு மீண்டும் குதிரையின் முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டு, அதை நாட்டுக்குப் போகும்படி உத்தரவு இட்டான். ஆயுதபாணியான மனிதனின் கட்டளையை மீறக் குதிரைக்குத் தைரியமில்லை. தன்னுடைய வேட்டைத் தொழிலுக்குக் குதிரை எவ்வளவு சௌகரியமாய் இருக்கிறதென்பதைத் தற்செயலாய்த் தெரிந்து கொண்ட மனிதன் அன்று முதல் அதைத் தனக்கு அடிமை கொண்டான். "நண்பன் உயிரைக் கொல்ல உடந்தையாய் இருந்ததற்கு நல்ல தண்டனை கிடைத்தது" என்று குதிரையும் தலைகுனிந்து கண்ணீர் சிந்தியது.



# காலக்ஷேபம்

## கேள்விக்குப் பதில்

நீதிபதி :—நீ இவர் வீட்டில் திருடினாயா?

கைதி :—இல்லை.

நீதிபதி :—பின் இவர் உன்னை வீட்டில் பார்த்ததாகச் சொல்லுகிறாரே?

கைதி :—பொய்! பொய்!! நான் திருடும் போது இவர் வீட்டிலேயே இல்லையே.

—வி. நாராயணன்.



## ஆச்சரியம்!

வீட்டுக்காரர் :—மூனு மாசமா நீங்க வாடகையே கொடுக்காம இருப்பது எனக்கு ரொம்ப ஆச்சரியமா யிருக்கிறது, ஸார்!

குடி வந்தவர் :— நீங்கள் ஆச்சரியப்படுவானேன்? நான்தான் வாடகை கொடுக்க வில்லையே!

—ருக்மணி.



## சிக்கனம்!

கணவன் :— கொஞ்சகாலம் சிக்கனமாக இருக்க நிச்சயம் செய்தோமல்லவா?

மனைவி :—ஆமாம்; அதனால்தான் ஜவுளிக் கடைக்காரனிடம் போய் நீங்கள் பார்த்து வைத்திருந்த வேஷ்டியை வேண்டாமென்று சொல்லிவிட்டு அதில் பாதி விலைக்கு ரவிக்கைத் துணி வாங்கி வந்தேன்.

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.



## தர்மத்திற்கு!

அவன் :—அந்த மனிதன் சாகும்போது எல்லாவற்றையும் தர்மத்திற்கு வைத்து விட்டுப் போனான்.

அவள் :—அப்படியா! என்ன வைத்துப் போனான்?

அவன் :— அவனுடைய குழந்தை குட்டிகளைத்தான்!

—பி. கே. கி.



## திறந்த காரணம்!

ஒரு திருடன் ஒரு வீட்டின் பூட்டைத் திறந்து கொண்டிருந்தான்.

போலீஸ்காரன் :—டேய், திருட்டுப் பயலே, ஏண்டா பூட்டைத் திறக்கிறாய்?

திருடன் :—இல்லீங்க; வழியில் வரும் போது ஒரு சாவி கிடந்தது. அது எந்த வீட்டினுடைய பூட்டுக்குச் சரியாயிருக்கிறதோ அந்த வீட்டுக்காரரிடம் கொடுத்து விடலாமென்றுதானுங்க.

—எஸ். பி. ஆர். பாபு.

## கடன் இல்லையா?

கருப்பன் (கோபமாய்) :—என்னடாப்பா வேணும்? மறுபடியும் ஏதாவது கடன் கேட்க வந்துட்டியோ?

ராமு :—ஆமாம், மாமா! ஊரிலேருந்து நல்ல ஒட்டுமாம்பழம் என் அண்ணன் பார்ஸல் பண்ணி யிருக்கிறது. சித்தே கத்தி கேட்டு வாங்கிவரச் சொன்னான்.

கருப்பன் (சந்தோஷமாய்) :—நீ வீட்டிற்குப் போடா, கண்ணே! நானே இதோ கொண்டு வருகிறேன்.

—கே. எஸ். சண்முகம்.



## முன்னேற்றம்

கோபாலன் :—ஏ, முத்து! நம்ப வெங்கடாசலம் செட்டியார் கடை இப்போ கொஞ்சம் முன்னேறி இருக்காப்போல இருக்கே!

முத்து :—ஏண்டா பொய் சொல்றே, நான் நேற்று அவர் கடைக்குப் போயிருந்தேன். வியாபாரமும் மோசமாக இருக்கிறது. சாமான்களும் அதிகமாக இல்லையே!

கோபாலன் :—அடே, நான் அதைச் சொல்லலேடா. அவர் கடையின் முன்னால் இரண்டு பெஞ்சைக் கடையுடன் சேர்த்திருக்கிறாருடா.

—கே. சங்கரம்.



## சம்பளம் உயர்தல்

குமாஸ்தா (மானேஜரிடம்) :—நான் இப்பொழுது மூன்று பேர்களுடைய வேலையைச் செய்தும் ஒருத்தர் சம்பளம்தான் கிடைக்கிறது. அதனால் தயவு செய்து ஏதாவது கொஞ்சம் உயர்த்துங்கள், ஸார்!

மானேஜர் :—நான் உயர்த்த முடியாது. மற்ற இரண்டு பேருடைய பெயர்களையும் சொல்லு. அவர்களை வேலையிலிருந்து எடுத்து விடுகிறேன்.

—எஸ். ஸ்ரீநிவாசன்.



## நல்ல வழி

"என் தம்பி ரொம்ப சோம்பேறி; பூமிக்கும் பாரமாய்க் காலம் தள்ளுகிறான். ஏதாவது ஒரு யோசனை சொல்லேன், அவனைச் சீர் திருத்த."

"பூமிக்குப் பாரமா யிருந்தால் அவனை விமானம் ஓட்டி வேலைக்கு அனுப்பு. அது தான் அவனது பாரத்தைப் பூமியிலிருந்து எடுக்கும் வழி."

—ஜெயஸ்ரீ.

சேலம் சங்கீத சபா (REGD.)

15-11-44 புதன்கிழமை மாலை 6 மணிக்கு

ஸ்ரீமதி D. K. பட்டம்மாள்

(உயர்ந்த பக்க வாத்யங்களுடன்)

அரிய சங்கீதக் கச்சேரி நடைபெறும்

26-11-44 சபையின் முதல் பொதுக் கூட்டத்திற்கு அங்கத்தினர்கள் யாவரும் வரக் கோரப்படுகிறார்கள்.

டிக்கெட் விவரம்: ரூ. 2/8, 1/8 அணா 0-12-0

B. ரங்கநாதம் செட்டியார்
கௌரவ காரியதரிசி.



இருமல்

இதைப் போல் அபாயகரமானது



இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும்
உயர்ந்த மருந்து

ஸிரோலின்
ரோச்



பெரீஸ்
பிஸ்கட்ஸ்

குழந்தைகளைப் போஷித்து வளர்க்கும் ஆகாரம், சிறாண்டிகளுக்கு சிறந்ததோர் உணவு.

PERRY & COMPANY, BISCUITS MANUFACTURERS, USILAMPATTI




அனாவசியமானவற்றை நீங்கள் வாங்கும்போதெல்லாம், உண்மையிலேயே நேருவதென்ன? அநேகப் பொருட்களின் விலைகள் அளவு கடந்து உயர்வாயிருக்கின்றன. உங்களுக்கு உண்மையிலேயே தேவையில்லாத பொருட்களை வாங்கும் போதெல்லாம் உங்கள் பணத்தை இழக்கிறீர்கள். வாங்கியே தீரவேண்டுமென்றும் அவசியம் நேர்ந்தாலன்றி எதையும் வாங்காதீர்கள். யுத்தகால விலைகளால் பணத்திற்கேற்ற பொருட்கள் கிடைப்பதில்லை.

நகை, நிலம், கட்டடம், பண்டங்கள், செய்பொருட்கள் ஆகிய எதை வாங்கினாலும் உங்கள் பணத்திற்கு நஷ்டம் ஏற்படக் கூடும். அவற்றின் விலைகள் ஏற்றத் தாழ்வுகளுக்கு உள்ளாகும். இப்போது விலை இறங்கிக் கொண்டிருக்கிறதே தவிர உயரவில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த; முதலீடுகள் பந்தோபஸ்தானவை, இலாபகரமானவை:-

★ இன்ஷ்யூரன்ஸ்,
★ கூட்டுறவு சங்கங்கள்,
★ சேமநிதி,
★ தபாலாபீஸ் சேமநிதி,
★ அரசாங்கக் கடன் பத்திரங்கள்,
★ நேஷனல் சேவிங்ஸ் - ஸெர்டிபிகேட்கள்.

பாதுகாப்பான முதலீடுகளில் கிடைக்கக் கூடிய இலாபம் குறைவாயிருக்கலாம். முதல் பந்தோபஸ்தாயிருக்கிறது; யுத்த காலத்தில் அதுதான் முக்கியம்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள்.

## மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்

FRA 1332 TM

# பாரதி ஞாபகச் சின்னம்

பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டுமென்னும் யோசனைக்குப் பிரமாதமான ஆதரவு கிடைத்திருப்பதை நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

கோயமுத்தூரில் சென்ற வாரத்தில் சிறப்பாக நடைபெற்ற தமிழ் நாட்டு எழுத்தாளர் மகாநாட்டில் பின்வரும் தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது:—

“பாரதி பிறந்த ஊராகிய எட்டயபுரத்தில் பாரதி ஞாபகார்த்தமாக ஒரு வாசகசாலை ஏற்படுத்துவதற்கு ‘கல்கி’ பத்திரிகை ஆரம்பித்திருக்கும் முயற்சியை இம் மகாநாடு பாராட்டுகிறது. பாரதி உருவச் சிலை ஒன்றைச் சென்னையில் பிரதிஷ்டை செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்கும்படி ஸ்ரீ வ. ரா. வை இம் மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது. மேற்படி இரண்டு காரியங்களுக்கும் உதவி செய்யும்படி தமிழர்களையும், தமிழ் எழுத்தாளர்களையும் கேட்டுக் கொள்ளுகிறது.”

மேற்படி தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றி வைத்ததின் பொருட்டு எழுத்தாளர் மகாநாட்டுக்கும், மகாநாட்டின் திறமை வாய்ந்த தலைவருக்கும் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களை ஆசிரியராகக் கொண்ட “தினசரி”ப் பத்திரிகை மேற்படி ஞாபகச் சின்ன நிதியை ஆதரித்து எழுதியிருப்பதுடன் நன்கொடையாளரின் ஜாபிதாவை வாரந்தோறும் வெளியிட்டு வர இசைந்திருப்பதையும் மகிழ்ச்சியுடன் குறிப்பிட விரும்புகிறோம்.

* * *

அடுத்தபடியாக, பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார் இது விஷயமாக எடுத்துக் கொண்டிருக்கும் சிரத்தையையும் முயற்சியையும் குறிப்பிட வேண்டும். சங்கத்தின் சார்பாக உடனே ரூ. 25 அனுப்பிவைத்ததுடன், ஒரு பொதுக் கூட்டமும் அவர்களால் கூட்டப்பட்டது. விவரம் பின்வரும் கடிதத்தில் காணலாம்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கம், மாதுங்கா.
5—11—44.

பாரதி ஞாபகார்த்த நிதி வசூல் சம்பந்தமாய், பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவின் கீழ்ப் பல பொது ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய பொதுக் கூட்டம் 5-11-44 ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது. அடியிற்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

1. தேசிய மகா கவி பாரதியாரின் ஞாபகார்த்தமாக அவர் பிறந்த எட்டயபுரத்தில் புத்தக சாலை நிறுவுதல் என்ற நோக்கத்தை இந்தப் பொதுக் கூட்டம் முழு மனதுடன் ஆதரிக்கிறது.

2. மேற்படி காரியத்திற்காக “கல்கி” அறிவித்து வரும் நிதிக்குத் தமிழ் அன்பர்கள் அனைவரும் பொருளுதவி செய்யுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

3. பம்பாயில் மேற்படி நிதிக்கு வசூல் செய்வதற்காகக் கீழ்க்கண்ட பேர்கள் அடங்கிய கமிட்டி **** நியமிக்கப்படுகிறது.

பம்பாய்க் கமிட்டி மூலம் மேற்படி நிதிக்குப் பணம் அனுப்ப விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்திற்குத் தொகையை அனுப்பலாம்:

எச். வெ. ராமகிருஷ்ணன்,
அகிலா கஞ்ஜ், பிரமன் வாடா ரோட்,
மாதுங்கா (ஜி. ஐ. பி.)

பம்பாய்த் தமிழன்பர்களின் சிறந்த உதாரணத்தை மற்றும் வட நாட்டின் பல இடங்களிலும் இலங்கைத் தீவிலும் உள்ள தமிழன்பர்கள் பின்பற்றி இந்தப் புனிதமான காரியத்துக்கு ஆங்காங்கு நிதி வசூலித்து அனுப்புவார்களென்று எதிர்பார்க்கிறோம்.

* * *

எல்லாம் சரிதான்; எந்த இடத்தில் ஞாபகச் சின்னம் நிறுவ வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்படுகிறதோ, அந்த எட்டயபுரத்தில் இதைப் பற்றி சிரத்தை ஏற்பட்டிருக்கிறதா என்று கேட்கக்கூடும். இதற்குப் பதில் பின்வரும் கடிதத்தில் காணலாம்:—

எட்டயபுரம்,
6—11—44.

எட்டயபுரத்தில் பாரதி ஞாபகார்த்த நூல் நிலையம் கட்ட வேண்டுமென்று தாங்கள் கேட்டுக் கொண்டதைப் பெரிதும் மதித்துத் தாங்களே அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது பற்றி மிகவும் சந்தோஷம். இது சம்பந்தமாக என்னால் இயன்ற சகல உதவிகளையும் செய்யத் தயாராயிருக்கிறேன். இத்துடன் தங்களுக்கு அந் நிதிக்கு ரூ. 50-0-0 என்னுடைய நன்கொடையாக ‘இன்ஷூர்’ செய்திருக்கிறேன். ஐயாயிரம் ஐம்பதாயிரமாகப் பெருகிவிடுமென நம்புகிறேன். முதல் முதலாகத் தாராளமாக நன்கொடையளித்து நிதியை ஆரம்பித்து வைத்திருக்கும்

ஸ்ரீ டி. கே. சி. அவர்களுக்கும் எனது மனப் பூர்வமான வந்தனம்.

தங்கள் அன்புள்ள,
மு. கந்தசாமி செட்டியார்,
தலைவர், பாரதி இலக்கிய மன்றம்.

* * *

பாரதியார் சாதி, மத வித்தியாசங்களை வெல்லாம் கடந்த அமரகவி. கண்ணனையும் சக்தியையும் பற்றிப் பாடியதுபோல் அல்லாவையும் ஏசுவையும் பற்றிப் பாடியிருக்கிறார். அத்தகையவருடைய ஞாபகார்த்த நிதியை ஆதரித்து எழுதியுள்ள ஒரு முஸ்லிம் நண்பரின் கடிதத்தையும் இங்கு மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறோம்:—

(முகாம்) எட்டயபுரம்,
4—11—44.

பாரதி பிறந்த எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகார்த்தமாகத் தாங்கள் நிதி திரட்ட முன் வந்ததைப் பாராட்டுகிறேன். நான் மாத்திரம் என்ன? தமிழ் நாடே பாராட்ட வேண்டிய காரியம் இது. பல வருஷங்களுக்கு முன்னேயே செய்திருக்க வேண்டிய காரியம் இது. போகட்டும். இத்தனை வருஷங்களுக்குப் பிறகாவது இந்த உத்தமமான — அவசியமான காரியத்தைச் செய்யத் தாங்கள் முன் வந்தீர்களே, இதைத் தமிழ் மக்களின் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். எட்டயபுரம் பாரதி இலக்கிய மன்றத்தினரின் ஆசை தங்களின் தன் முயற்சியால் நிறைவேறி விட்டது.

இந்த நல்ல காரியத்துக்குத் தமிழ் நாட்டு முஸ்லிம் சகோதரர்கள் தமது பரம்பரை கௌரவத்துக்குத் தகுந்தபடி தாராளமாகப் பண உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எனது நன்கொடையாக ரூ. 20—0—0 அனுப்பி யிருக்கிறேன். தயவு செய்து பெற்றுக் கொள்ளவும்.

அன்புள்ள,
எஸ். கே. எம். முஸ்தபா மரைக்காயர்.

* * *

இன்னும் நமக்கு வந்திருக்கும் கடிதங்களுக்குள்ளே, நமது நாமக்கல் தேச பக்தக் கவிஞர் ஸ்ரீ வெ. இராமலிங்கம் பிள்ளையின் கடிதத்தைக் குறிப்பிட வேண்டும்:—

நாமக்கல்,
7—11—44.

தாங்கள் எட்டயபுரத்தில் 'மகாகவி ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி அவர்கள் வசித்த வீட்டைப் பார்க்கப்போன கதையை 'கல்கி'யில் எழுதியிருந்ததைப் படித்து அசெளகரியத்தால் இளைத்துக் கிடந்த நான்,

''விருந்துமானால் ஆவியது வீயும் உயிர்மீளும்
மருந்துமானால் ஆவியது வாழ்மணி ஆழி''

என்று கம்பன் சொன்னதற்கிணங்கப் புத்துயிர் பெற்றுப் பூரித்துப் போனேன்.



வருஷா வருஷம் பல இடங்களில் 'பாரதி விழா' கொண்டாடப் படுகின்றது. சில இடங்களில் ஏராளமான பணமும் செலவழிக்கிறார்கள். ஆனால் தமிழ் மொழியின் பண்பு கெடாமல் அறிஞர்கள் அதிசயிக்கும்படியான புதுமைகளைப் புகுத்திப் புரை செய்யாத புரட்சியை உண்டாக்கி வைத்த இந்தப் புலவர் பெருமானுக்கு அவருடைய ஞாபகார்த்தமான ஒரு நிலையங்கூட இல்லையே என்று நெடுநாட்களாக என் நெஞ்சில் குமுறிக் கொண்டிருந்த ஒரு குறையைத் தீர்த்து விட்ட 'கல்கி'யை நான் வாயாரப் புகழ்ந்து மனமார வாழ்த்துகின்றேன்.

''பாரிமுதல் சடையப்ப வள்ளல் என்ற
பாவலர்கள் நாவினுறை பலபேர் வாழ்ந்து
சீர்வரும் தமிழ்மொழியின் இனிய ஓசை
திசையனைத்தும் போய்ஒலிக்கச் செய்த
(நாட்டில்

வறியநற் கலைஞரும் கவிகள்பாடி
வைக்கமிகத் தமிழ்நாட்டிற் குணர்வூட்டிய
பாரதியார் மிகக்கொடிய வறுமைமேவிப்
பார்த்திருந்த தமிழர்கற்ற பழிதான்
(என்னே!''

என்று பல ஆண்டுகளுக்கு முன்னால் நான் பாடினேன். அந்தப் பழியை உங்கள் முயற்சி ஓரளவில் நீக்கிவிடும் என்பது நிச்சயம்.

பாரதியின் பெருமையை நன்கு அறிந்து விட்ட தமிழ் மக்கள் உங்களுடைய முயற்சியின் உயர்ந்த நோக்கத்தை உணர்வார்கள். உங்கள் பிக்ஷா பாத்திரம் விரைவில் நிரம்பி வழிந்து போகும்படி காணிக்கைகள் வந்து குவியும். வாழ்க தமிழர்கள். நீங்கள் நினைக்கும் பாரதி நிலையம் நீடூழி நின்று நிலவும்.

இத்துடன் வரும் என்னுடைய காணிக்கை பத்து ரூபாயை ஏற்றுக் கொள்ளுங்கள்.

அன்புள்ள,
வெ. இராமலிங்கம்.

நமது மாஜி மந்திரி டாக்டர் சுப்பராயன் தமது நன்கொடையுடன் ஒரு கடிதமும் அனுப்பி யிருந்தார்:—

ராயப்பேட்டை, சென்னை
1—11—44.

பாரதியார் தமது கவிதைகளினால், ஒவ்வொரு தமிழர் இதயத்திலும் தேசபக்தியையும் தேசிய ஆர்வத்தையும் தூண்டி விட்டிருக்கிறார். தமிழ் இலக்கியத்தை உயர்வு படுத்தியது மன்றி, நமது மறுமலர்ச்சி இயக்கத்தின் கவிஞராகவும் அவர் இருந்திருக்கிறார். அவர் பிறந்த இடத்தில் அவருக்கு ஞாபகச் சின்னம் எழுப்புவது மிகவும் பொருத்தமே யாகும்.

பாரதியாரின் சிறப்பு, அவர் தமது தேசிய கவி என்பது மட்டுமல்ல; அவர் சமூகப் புரட்சிக் கவியாகவும் இருந்தார் என்பது தான். மற்றவர்கள் அறிந்து சொல்லு முன்னமேயே, பாரதியார், சமூக சீர்திருத்தமும் அரசியல் சீர்திருத்தமும் சேர்ந்தாற்போல் நடக்கவேண்டிய காரியங்கள் என்று பறை சாற்றிக் கூறினார்.

பாரதியார் உயிர் வாழ்ந்தபோது, தமிழ் நாடு தன் அரும் பெரும் புதல்வனின் மேதையை அறியவில்லை. இப்பொழுதாவது அவரது ஞாபகச் சின்னத்தைத் தகுதியான முறையில் அமைத்து, தான் செய்த தவறுக்குப் பரிகாரம் தேடிக் கொள்ளுமாக!

பாரதியாரின் ஞாபகத்தை நிலை நாட்டத் தாங்கள் முன்வந்திருப்பது பற்றி எனக்குச் சந்தோஷம். தங்களுக்கு வெற்றி உண்டாக வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,

ப. சுப்பராயன்.

"தமிழ்ப் பண்ணை" நிலயத்தைச் சேர்ந்த ஸ்ரீ சா. அண்ணாமலை அவர்கள் எழுதியுள்ள கடிதத்தின் ஒரு பகுதி வருமாறு:—

"பாரதியார் ஞாபகார்த்தப் புத்தகாலயம் ஏற்படுத்தும் புனிதமான முயற்சியில் தமிழ் மக்கள் அனைவரும் ஒத்துழைப்பார்கள் என்பதில் ஐயமில்லை ...... இது சம்பந்தமாக என்னாலான உதவிகளையும் செய்யத் தயாராக இருக்கிறேன். பண்ணை வெளியீடுகள் அனைத்திலும் ஒவ்வொரு பிரதியை பாரதியார் ஞாபகார்த்த வாசக சாலையில் வைப்பதற்குச் சித்தமாக இருக்கிறேன்."

* * *

மேற்படி நிதி சம்பந்தமாக தேசத்தில் ஏற்பட்டிருக்கும் உற்சாகத்தைப் பார்த்தால், சில நண்பர்கள் நம் பேரில் கூறிய புகார் உண்மையென்றே தோன்றுகிறது. அதாவது, "குறைந்த பட்சம் ஐயாயிரம் ரூபாய்வேண்டும்" என்று நாம் குறிப்பிட்டது பிசகு; இன்னும் பெரிய தொகை குறிப்பிட்டிருக்க வேண்டுமென்பது அவர்களுடைய கட்சி. "குறைந்த பட்சம்" என்றுதான் நாம் குறிப்பிட்டிருக்கிறபடியால், தொகை அதற்கு அதிகமாய்ச் சேர்ந்தால் தவறு ஒன்றும் இல்லை. எப்போதும் குறைவாகச் சொல்லி அதிகமாகச் செய்வது தான் பெருமை. தமிழர்களுடைய தனிக் குணம் அதுதான்.

எவ்வளவுக்கு நிதி அதிகமாகச் சேர்கிறதோ அதற்குத் தகுந்தபடி ஞாபகச் சின்னத்தையும் கம்பீரமாக அமைக்கலாம்.

ஆகவே, தமிழ்நாடெங்கும் உள்ள தமிழன்பர்களும் பாரதியின் பக்தர்களும் உற்சாகமும் ஊக்கமும் கொண்டு நிதி வசூலில் ஈடுபடுமாறு கேட்டுக் கொள்கிறோம். இந்தப் புண்ணிய 1944-ம் வருஷத்திற்குள்ளாகவே மேற்படி ஞாபகச் சின்ன நிதியைச் சேகரித்துப் பூர்த்தி செய்துவிட்டால் மிகவும் விசேஷமாயிருக்கும்.

# பாரதியார்

## ஞாபகச் சின்ன நிதி

பாரதியாரின் ஞாபகார்த்தமாக பாரதியார் பிறந்த எட்டயாபுரத்தில் ஒரு புத்தகாலயம் அமைக்கும் பொருட்டு இந்த நிதி வசூலாகிறது. தேச பக்தர்களும் தமிழன்பர்களும் தத்தம் நன்கொடையைப் பின்வரும் விலாசத்துக்கு அனுப்பிவைக்கக் கோருகிறோம்.

மானேஜர், "கல்கி", சென்னை.

## இந்த வாரத்து வசூல்

| | |
|---|---|
| நாராயணன் & கம்பெனி மவுண்ட் ரோட், சென்னை. | 101–0–0 |
| ஆசிரியர் "கல்கி" சென்னை | 100–0–0 |
| ஸ்ரீ டி. சதாசிவம், மானேஜர் "கல்கி", சென்னை | 100–0–0 |
| ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி | 100–0–0 |
| ஸ்ரீ எம். கந்தஸ்வாமி செட்டியார், எட்டயாபுரம் | 51–0–0 |
| ஸ்ரீ ஜே. எம். பிரான்சி கொரைரா | 30–0–0 |
| கொல்லபட்டி ஜமீன்தார் | 25–0–0 |
| ஸ்ரீ காரிகார் & கோ | 25–0–0 |
| ஸ்ரீ ஜி. வி. சுப்பையா, கல்கி ஏஜெண்டு, கோவை | 25–0–0 |
| ஸ்ரீ டி. வி. சுப்ரமணியம், உதகமண்டலம் | 25–0–0 |
| தமிழ்ச் சங்கம், பம்பாய் | 25–0–0 |
| ஜனாப் என். கே. எம். முஸ்தபா மரைக்காயர் | 20–0–0 |
| ஸ்ரீ என். வெங்கடராமன் அக்கௌண்டெண்ட் "கல்கி" | 20–0–0 |
| ஓர் அபிமானி, கோயமுத்தூர் | 15–0–0 |
| ஸ்ரீ வி. பூவராஹன், தஞ்சை | 15–0–0 |
| ஸ்ரீ ராஜா சங்கரலிங்கம், தூத்துக்குடி | 11–0–0 |
| ஸ்ரீ ஜோதி விலாஸ், அருப்புக்கோட்டை | 10–0–0 |
| ஸ்ரீ வி. ஆர். சுப்பையர், மதுரை | 10–0–0 |
| ஸ்ரீ ஜவாஹர் வாசகசாலை, ஷண்முகநாதபுரம் | 10–0–0 |
| ஸ்ரீமதி ராஜம் பாரதி | 10–0–0 |
| ஸ்ரீ ஏ. முருகேச முதலியார், 'புரொப்ரைட்டர்', கிங் டோன் பிளாக் மேக்கர்ஸ், சென்னை | 10–0–0 |
| ஸ்ரீ ஆர். வெங்கடாசல முதலியார், டைபிஸ்ட், "கல்கி", சென்னை. | 5–6–7 |

ஸ்ரீ எல். எஸ். பால சுப்ரமணியம், மார்ஷெல்ஸ், சென்னை 5—0—0

ஸ்ரீ எம். பி. கல்யாணசுந்தரம், விளம்பர இலாகா, "கல்கி", சென்னை. 5—0—0

ஸ்ரீ வி. வைத்தியநாதன், "கல்கி", சென்னை 5—0—0

ஸ்ரீ கே. வெங்கடராமன், "கல்கி", சென்னை 5—0—0

ஸ்ரீ ஆர். சேஷகிரி ராவ், சக்தி காரியாலயம், சென்னை 5—0—0

ஸ்ரீ ஆர். பித்துமாதவ ராவ், புரொப்ரைட்டர், உடுப்பி லாட்ஜ், கீழ்ப்பாக்கம் 5—0—0

ஸ்ரீ வி. ஏ. மகாலிங்கம் எம்.ஏ., தியாகராய நகர் 5—0—0

ஸ்ரீ கே. ஆர். கலியாண ராமன், புரசைவாக்கம் 5—0—0

ஸ்ரீ ராஜ நாராயணன் பி.ஏ., எழும்பூர் 5—0—0

ஸ்ரீ எம். கே. ராஜன், கல்கி ஏஜெண்ட், வேலூர் 5—0—0

ஸ்ரீ வி. சோமசுந்தரம் பிள்ளை, ஒட்டல் சத்திரம் 5—0—0

ஸ்ரீ கு. ப. அ. கு. லெ. குப்பான் செட்டியார், நாட்டரசன் கோட்டை 5—0—0

ஸ்ரீ கே. வி. ஸ்ரீனிவாஸன், எழும்பூர் 5—0—0

ஸ்ரீ டி. எம். ராஜபாதர், போர்மென், கல்கி அச்சகம் 3—0—0

ஸ்ரீ ஜி. சுப்ரமண்யம், நியூ இந்தியா லைப் இன்ஷ்யூரன்ஸ், சென்னை 3—0—0

ஸ்ரீ ஏ. ஏழுமலை, கல்கி அச்சகம், சென்னை 3—0—0

ஸ்ரீ ரங்கப்ப நாயுடு, எழும்பூர் 3—0—0

ஸ்ரீ எல். கிருஷ்ணமூர்த்தி, கல்கி காரியாலயம், சென்னை 1—1—3

(மதுரை கல்கி ஏஜண்ட் ஸ்ரீ ஏ. ஷண்முகசுந்தரம் பிள்ளை மூலமாக நன்கொடை அளித்தவர்களின் விவரம்):—

ஸ்ரீ எஸ். எம். ஆர். சுப்பராம அய்யர் 20—0—0

ஸ்ரீ ஏ. வைத்தினாதய்யர் 10—0—0

ஸ்ரீ எம். டி. ராமசுப்பிரமணியம் 10—0—0

ஸ்ரீ எம். நரசிங்க ராவ் 10—0—0

ஸ்ரீ கே. கோபாலன் 5—0—0

ஸ்ரீ கம்பம் ராமகிருஷ்ண அய்யர் 5—0—0

ஸ்ரீ பி. ஏ. பி. கே. அழகர்சாமி 5—0—0

ஸ்ரீ ஏ. ஷண்முக சுந்தரம் பிள்ளை, கல்கி ஏஜெண்ட் 5—0—0

ஸ்ரீ ஆறுமுகக் கோனார் 5—0—0

ஸ்ரீ கே. ராஜு 5—0—0

ஸ்ரீ ஏ. ராஜாராம் 5—0—0

ஸ்ரீ எஸ். வி. ராமய்யர் 5—0—0

ஸ்ரீ பி. நடேசப் பிள்ளை 2—0—0

ஸ்ரீ சுப்பையா முதலியார் 2—0—0

ஸ்ரீ எஸ். சுப்பிரமணிய பிள்ளை 2—0—0

ஸ்ரீமதி அலமேலு அம்மாள் 2—0—0

ஸ்ரீ எஸ். முத்துச்சாமி செட்டியார். 2—0—0

மதுரை "கல்கி" ஏஜெண்ட் மூலம் ஒரு ரூபாய் நன்கொடை அளித்தவர்கள் :—ஸ்ரீமான்கள் ஜி. வரதராஜுலு, எஸ். முருகேசம் பிள்ளை, வி. எஸ். பார்த்தசாரதி அய்யங்கார், எல். சோமசுந்தர பட்டர், ராமலிங்கம் செட்டியார், நாகராஜய்யர், சாரங்கய்யர், கோச்சடை சோமசுந்தரம், ஸ்ரீமதி மீனாக்ஷி அம்மாள், டி. ஆர். கிருஷ்ணஸ்வாமி அய்யர், எஸ். கோபால பிள்ளை, வி. என். முத்துராமன் செட்டியார், எம். சுப்புரங்கன், ஸ்ரீமதி சாந்தமதி அம்மாள், எஸ். அனந்த கிருஷ்ணய்யங்கார், கே. ஷண்முக சுந்தரம் பிள்ளை, ஸ்ரீமதி பி. என். ராஜலக்ஷ்மி அம்மாள், கே. மீனாக்ஷி சுந்தரம், எஸ். வைத்தினாதய்யர், கே. சோமசுந்தரமய்யர், வி. வெங்கடேஸ்வரன், சோ. மாணிக்கம் பிள்ளை, எஸ். நாகரத்தினம் பிள்ளை, க. ரத்தினம் செட்டியார், டி. ஆர். நரசிம்மய்யர், ஏ. கன்னியப்ப நாடார், காதர்சா, முத்துச்சாமி செட்டியார், பக்கிரி ராவுத்தர், கே. எல். குப்புசாமி, எம். மாரியப்பக் கோனார், கொளும்பு விலை சீதாராமன், கே. வெங்கட்டராமய்யர், என். எல். ராஜன், எம். நாராயணன், பொ. கிருஷ்ண நாயுடு, எம். சோமு பிள்ளை, எம். பிச்சைக் கோனார், வி. முத்துராமலிங்கமய்யர், வி. ஆர். ராமய்யர், பி. துரைசாமி கோனார், எம். வி. முத்துராமலிங்கம், ஏ. சாமிநாத முதலியார், ஏ. ராமநாதன், ஏ. துரைராஜு பிள்ளை, அங்கண பத்தர், என். லாஜூலி சாயபு, கே. வேலாயுதம் பிள்ளை, ஆர். ஷண்முகநாதன் அண்டு கம்பெனி, வி. சீனிவாச அய்யர், நவநீதகிருஷ்ணன், ஆவுடி முதலியார், ஏ. வி. சமையக்கோன், கே. செல்லையாப் பிள்ளை, ஸ்ரீமதி காமாக்ஷி அம்மாள், அமிர்தம், எஸ். நாராயண அய்யங்கார், எஸ். கிருஷ்ண ராவ், ஓ. ஆர். ராமமூர்த்தி, வி. டி. சுந்தரகோபால், எஸ். ராஜு. ஆக மொத்தம் 61 பேர் ரூ. 61—0—0

சென்ற வாரத்து வசூல் ரூ. 202—0—0

ஆக மொத்தம் வசூல் ரூ. 1284—7—10

# 1957-ம் வருஷத்திய 3% வட்டி
# விக்டரி லோன் பத்திரங்கள்
## வாங்குவதெப்படி



**மிகவும் எளிது.** நீங்கள் உங்கள் பாங்கிகளுக்கு எழுதினால் மட்டும் போதுமானது. அவர்கள் எல்லா ஏற்பாடுகளையும் செய்து விடுவார்கள். இல்லாவிட்டால், பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி, கான்பூர் ஆகிய ஊர்களிலுள்ள இந்திய ரிசர்வ் பாங்கிகளிலும், மற்ற ஊர்களிலுள்ள இந்திய இம்பீரியல் பாங்கியின் கிளைக் காரியாலயங்களிலும் அல்லது எந்த அரசாங்க கஜானாவிலும் நீங்கள் மனுச்செய்து கொள்ளலாம்.



**உங்கள் வீதாசாரம்.** வருஷத்திற்கு இரண்டுமுறை அதிகாரிகளால் உங்களுக்கு அனுப்பப்படும். அதை ஒரு சாதாரண 'செக்' போலவே நீங்கள் மாற்றிக் கொள்ளலாம். அல்லது அந்தத்தொகையை உங்கள் கணக்கில் வரவுவைத்துக் கொள்ளும்படி உங்கள் பாங்கர்களுக்குத் தெரிவிக்கவும்.



**எவ்வளவு தொகையானாலும் சரி.** மறு அறிக்கை வரையில் உங்கள் விருப்பம் போல், எவ்வளவு தொகையானாலும் இதில் போட்டு வைக்கலாம். நீங்கள் தொகை சேமிக்க சேமிக்க இந்த கடன் பத்திரங்களை வாங்கிக்கொண்டே போகலாம்.

**உங்கள் முதல் பத்திரமாயிருக்கிறது.** 1957-ம் வருடத்திய 100-க்கு 3 வட்டி விக்டரி கடன் நடத்துகிறவர்கள் இந்திய அரசாங்கத்தார். அவர்கள் கொடுக்கும் பிராமிசரி நோட்டுக்களும் ஜாமீன் பத்திரங்களும் 1957-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 1-ம் தேதி அதன் அசல் தொகை திருப்பிக் கொடுத்து விடப்படும் என்று இந்திய அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துகின்றன.

**100-க்கு 3 வட்டி** நீங்கள் போடும் முதலின் பேரில் நிச்சயமாகக் கொடுக்கப்படும்.

[illegible] இடங்களில் நீங்கள் போட்டுவைக்கும் தொகை என்றால் பூரண பாதுகாப்பே ஒழுங்கான முறைப்படி வட்டிகள் வரும். மதிப்பு குறைந்து விடுமென்றோ, நஷ்டமாகி விடுமென்றோ அச்சத்திற்கிடமில்லை. உங்கள் பணத்தைப் போட்டு வைப்பதில் நீங்கள் ஜாக்கிரதையாயிருக்கிறவர்களானால், உங்கள் பணத்தைப் போட்டுவைக்கும் முன்னும் நீங்கள் கவனிக்க வேண்டியவை இவைதான்.

செலவைக் குறைத்து சேமிப்பைப் பெருக்கு

**1957-ம் வருஷத்திய 3% வட்டி**

# விக்டரி லோன்
## பத்திரங்களை வாங்குங்கள்

இந்திய அரசாங்க நிதி இலாகா வெளியிட்டது

AAA 1160 TH



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## நடராஜ் - சகுந்தலா

"அலாரிப்பு — இது உதய நக்ஷத்திரத்தின் ஜாஜ்வல்யமான துடிப்பைப் போன்றது. பரத சாஸ்திரத்தின் ஊற்றுக் கண்ணிலே, இதயத்திலிருந்து குபு, குபு எனப் பெருகும் உணர்ச்சி, தாள ராக பாவங்களில் குழைந்து, அலாரிப்பு என்கிற வெள்ள ஒளியாகப் பாய்கிறது. இங்கேதான் கலா தேவி முதன் முதலாக ஸ்நானம் செய்ய ஆரம்பிக்கிறாள் ......" என்று புரோகிராம் புத்தகத்திலே படித்ததும்,

"ராமராமா! ஸ்திரீகள் ஸ்நானம் செய்யும் இடத்தில் நமக்கு என்ன வேலை? எழுந்து போகலாம்!" என்று எண்ணினேன்.

ஆனால், ஒரு சந்தேகம் ஏற்பட்டது. "கலாதேவி பிறந்து வளர்ந்து இத்தனை நாளாகக் குளிக்காமலே இருந்திருப்பாளா? அப்படியே இருந்தாலும் முதன் முதலில் ஸ்நானம் செய்வதற்கு ஆறு, குளம், அல்லது சமுத்திரத்தைத் தேடிப் போகாமல் போயும் போயும் இந்த ஸெண்ட் மேரிஸ் ஹாலுக்குத்தானா வந்திருப்பாள்?" என்று நினைத்துச் சற்றுத் தயங்கினேன்.

அவ்விதம் தயங்கியது நல்லதாய்ப் போயிற்று. ஏனெனில், "கலாதேவி முதன் முதலாக ஸ்நானம் செய்ய ஆரம்பிக்கிறாள்" என்றது, நவீன 'கலைத் தமிழி'ல் அலங்காரமாகச் சொன்ன வார்த்தையே தவிர, உண்மையில் ஸெண்ட் மேரிஸ் ஹால் ஸ்நான கட்டம் ஆகப் போவதில்லை யென்று விரைவிலேயே தெரியவந்தது!

* * *

நடராஜ் — சகுந்தலா கோஷ்டியின் நவீன நடனக் கச்சேரிகளைப்பற்றி நான் சில காலமாகக் கேள்விப்பட்டு வந்தேன். அவர்களுடைய விளம்பரப் படங்களைப் பார்த்ததில் ஏதோ உதய சங்கரையும், கோபிநாத்தையும் 'காப்பி' அடிக்கிறார்கள் என்று மட்டும்தான் தெரிந்தது. இதனால் அவர்களுடைய நடனத்தைப் பார்க்க வேண்டுமென்ற பரபரப்பு அவ்வளவாக உண்டாகவில்லை.

அக்டோபர் மீ முற்பகுதியில் காந்திஜி பக்த சபையார் ஸெண்ட் மேரிஸ் ஹாலில் தங்களுடைய வெள்ளி விழாவைக் கொண்டாடினார்கள். இருபத்தைந்து வருஷ காலமாக இந்தச் சபை நடந்து வந்தும் எப்படியோ இத்தனை காலமும் இதன் நடவடிக்கைகள் வெகு இரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தன. இந்த வெள்ளி விழா சந்தர்ப்பத்தில் ஆட்டம் பாட்டம் மேளம் தாளம் மத்தளம் போட்டோப் பிடிப்பு முதலிய எல்லா முறைகளினாலும் காந்திஜி பக்த சபையை விளம்பரப் படுத்தி விடுவதென்று மேற்படி சபையின் புதிய தலைவர் 'எவரெஸ்ட்' கந்தாம் அவர்கள் தீர்மானித்துச் சக்கைப்



போடு போட்டுவிட்டார். பத்துநாள் சங்கீதக் கச்சேரிகளும் நடனக் கச்சேரிகளும் நடத்தி, டிக்கட் வாங்கியவர்கள் வாங்காதவர்கள் எல்லாரையும் உபசரித்து அழைத்து ஏக நடபுடல் செய்து விட்டார். இப்படிக் கொள்ளை போய்க் கொண்டிருந்த சந்தர்ப்பத்தை நானும் ஒருநாளாவது பயன்படுத்திக் கொள்ள எண்ணி, நடராஜ் — சகுந்தலா நடனக் கச்சேரிக்குப் போய்ச்சேர்ந்தேன்.

இவர்களுடைய நடன நிகழ்ச்சி (புரோகிராம்) புத்தகத்திலேதான் மேற்கண்ட கலாதேவி ஸ்நானக் குறிப்பைப் படித்து முதலில் சந்தேகமும் பிறகு சந்தேக நிவர்த்தியும் எனக்கு ஏற்பட்டது.

* * *

மேற்படி அலாரிப்பு கட்டத்தில் நடராஜ் — சகுந்தலா இருவரும் மேடைக்கு வந்து, பரதநாட்டிய முறையில் அலாரிப்பிலே ஆரம்பித்து, சேர்ந்தாற்போல் சில ஸ்வரஜதிகள் பிடித்து, பதவர்ணம் ஆடி, தில்லானு ஆடி, கடைசியில் "நடனமாடினர்" என்னும் பாட்டுக்கு அபிநயமும் ஆட்டமும் சேர்த்து ஆடி, இவ்வளவும் கால் மணி நேரத்துக்குள் மூச்சு விடாமல் ஆடி, சபையோரை மூச்சுத் திணற அடித்து விட்டு, கடைசியில் உள்ளே போகிறார்கள்; திரையும் விழுகிறது!

எனவே, இந்த 'அலாரிப்பு' வகையைக் 'கலை வெள்ளம்' என்று கூறியதில் சிறிதும் பிசகில்லைதான்; — அதைக் காட்டிலும் கலைப்பிரளயம் என்று கூடச் சொல்லலாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

அதோடு, உதய சங்கரைக் 'காப்பி' அடித்திருக்கிறார் என்ற என் எண்ணத்தையும் மாற்றிக் கொண்டேன். இது வெறும் 'காப்பி' மட்டும் அல்ல. மேலெழுந்தவாரியான சில அம்சங்களில் உதயசங்கரைப் பின்பற்றி யிருப்பது உண்மையே. அந்தந்த நடனத்துக்கும் பாத்திரத்துக்கும் தகுந்த உடை அணிதல், அவ்வப்போது திரை போடுதல், மேடை அலங்காரம் செய்தல் முதலிய அம்சங்களிலே உதய சங்கரைப் பின்பற்றி யிருக்கிறார். ஆனால், அதோடு நின்று விடவில்லை. புதிய புதிய நடன வகைகளை ஸ்ரீ நடராஜ் சிருஷ்டித்திருக்கிறார்.

உதய சங்கரின் நடனத்தில் தென்னாட்டுச் சிற்பத் தோற்றங்கள், அஜந்தா சித்திர அலங்காரங்கள், மலையாளத்துக் கதகளி,



மணிப்பூர் நடனம் ஆகிய இவற்றின் கலவையைக் காணலாம். இவ்வளவோடு ஸ்ரீ நடராஜ் பரத நாட்டியத்தையும் சேர்த்துப் பஞ்சாமிர்தமாகச் செய்திருக்கிறார்!

அவ்வளவோடு கூட நிற்கவில்லை. புதிய புதிய நாடகக் கட்டங்களை நடனக் கலையில் வெகு பொருத்தமாக அமைத்திருக்கிறார்.

முக்கியமாக, அன்று நான் பார்த்த நடனங்களில் பஸ்மாஸுர மோஹினி, தந்தையும் புத்திரரும், ஆண்டாள் திருக் கலியாணம் முதலிய நடனங்கள் புதுமையாக இருந்ததுடன் அழகாகவும் இருந்தன.

எல்லாவற்றையும் விட 'ஆண்டாள் திருக்கலியாணம்' எனக்கு மிகவும் பிடித்திருந்தது. முதலில் தனபால் என்பவர் பெரியாழ்வாராகவும், குமாரி தனம் என்னும் பெண் அவருடைய தர்ம பத்தினியாகவும் வருகிறார்கள். அவர்களுடைய தோற்றத்தைப் பார்த்ததுமே நாம் 1914-ம் வருஷத்தையும் இந்தப் புண்ணிய வருஷத்திலே நடக்கும் பயங்கர யுத்தத்தையும் மறந்து ஆயிரத்து முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் இருந்த ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போய் விடுகிறோம். உடைகளும் வேஷமும் அவ்வளவு பொருத்தமா யிருக்கின்றன. நடனமும் அப்படியே.

சகுந்தலா, சிறுமி ஆண்டாளாக வந்து மற்ற வைஷ்ணவச் சிறுமிகளுடன் விளையாடும் நடனக் காட்சி வெகு அழகா யிருக்கிறது; தத்ரூபமாயும் இருக்கிறது.

பெருமானுக்குரிய மாலையை ஆண்டாள் தான் அணிந்து அழகு பார்ப்பது, பெரியாழ்

வர் அதைப் பார்த்து அவளைக் கடிவது, ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலையைப் பெருமான் (நடராஜ்) உவந்து ஏற்றுக் கொள்வது முதலிய சம்பவங்களை விளக்கும் நடனக் காட்சிகள் பிரமாதமாயிருக்கின்றன.

இந்த மாதிரி நடனக் காட்சிகளுக்கு அத்தியாவசியமான தேக அமைப்பை நடராஜ், தனபால், சகுந்தலா ஆகியவர்கள் பெற்றிருக்கிறார்கள். எல்லாரிலும் சகுந்தலா அதிகம் பெற்றிருக்கிறார். சில நடனத் தோற்றங்களில் அவரைப் பார்த்தால் சிற்பி அமைத்த விக்கிரகம் மாதிரியே இருக்கிறது.

உதய சங்கரினால் முதன் முதலில் பிரசித்தியான இந்த நாடக — நடனக் கதம்பக் கலையை நமது தமிழ் நாட்டில் ஒருவர் இவ்வளவு அழகாகக் கையாண்டு அதில் வெற்றி யடைந்திருப்பது எனக்கு அளவிலாத மகிழ்ச்சி தருகிறது.

சில சில அம்சங்களில் முன்னேற்றத்துக்கு இன்னும் இடமிருக்கிறது என்பதை நான் சொல்லி ஸ்ரீ நடராஜ் தெரிந்து கொள்ள அவசியமில்லை. அவருக்கே நிச்சயம் தெரிந்திருக்கும்.

உதாரணமாக, பின்னணி சங்கீதம் இன்னும் கொஞ்சம் அபிவிருத்தி யடைந்தால் தேவலை என்பதைச் சொல்லவா வேண்டும்?

முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய விஷயம், இந்த நாடக-நடன முறையில் பரத நாட்டியத்தைக் கலக்கும் விஷயத்தில் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும் என்பதுதான். பரத நாட்டியம் உலகத்திலேயே மிக அற்புதமான கலை என்பதற்காக, அதை இப்படி ஒரே பிடியாய்ப் பிடித்து மூச்சுத் திணற அடிக்க வேண்டியதில்லை. அபூர்வ திறமை தேவையான "தில்லானா" முதலிய ஆட்டங்களைத் தனிப் பரத நாட்டியக் கச்சேரிகளுக்கு விட்டு விடலாம்.

ஆடுவதற்கு எளிதாகவும், பார்ப்பதற்கு அழகாகவும் உள்ள சில அம்சங்களை மட்டும் பரத நாட்டியத்திலிருந்து எடுத்துக் கொண்டால்போதும்.

மொத்தத்தில், இளைஞர் நடராஜரின் கலை ஆர்வத்தையும், கற்பனா சக்தியையும் நான் பெரிதும் உவந்து பாராட்டுகிறேன். நவீன நடனக் கலைத் துறையில் அவருக்கு மேலும் மேலும் மகத்தான வெற்றிகள் காத்திருக்கின்றன என்று நம்புகிறேன்.




கும்பகோணம்

# டி. எஸ். ஆர்.

கம்பெனியின்

உயர்ந்த

- அத்தர்
- அரகஜா
- புனுகு
- ஜவ்வாது
- ஊதுவத்தி
- தசாங்கம்
- தைலங்கள்
- பன்னீர்
- பாக்குத்தூள்

முதலியன

விவரங்களுக்கு எழுதவும்

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள்:

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

பாலக்காட்டுக்கு ஸோல் ஏஜெண்டுகளும் கோயமுத்தூருக்கு ஸ்டாக்கிஸ்டுகளும்

தி சதர்ன் இந்தியா ஏஜன்ஸீஸ்

அவநாசி ரோடு — கோயமுத்தூர்




## 83. விழுந்து புரள்கிறான் பார்!

பரதனும் சேனையும் சற்றுத் தூரத்தில் வருவதைப் பார்த்த லக்ஷ்மணன் கோபம் கொண்டதைப் பார்த்தோம். "அவ்வளவு பேரையும் நான் ஒருவனே தொலைத்து விடுகிறேன், பார்" என்று ராமன் முன் வந்து அலறினான்.

இந்த வார்த்தையோடா நிற்கும், கோபமானது வெறியாக மாறும்போது?

யுத்தம் நடக்கவே ஆரம்பித்து விட்டது;— லக்ஷ்மணனது மனசில்தான். பேசுகிறான்:

அதோ எத்தனை ஆறுகள்! ரத்த ஆறுகள்தான்! முகபடாத் தோடு கூடிய யானைகளை இரத்த ஆறு உருட்டிக்கொண்டு போகிறது கண்ணுக்குத் தெரிகிறது!

துன்பம் (படர்) நமக்கும் தீர்ந்தது, உலகத்துக்குமே தீர்ந்தது இனி.

படர்எலாம் அழிபட,—
பருமயானையின்
நிடர்எலாம் உருட்டின,
தேரும் ஈர்த்தன,
குடர்எலாம் நிரைத்தன,
குருதி ஆறுகள்,
கடர்எலாம் மடுப்பன
பலவும் காண்டியால்

[படர் எலாம் அழிபட: துன்பம் எல்லாம் ஒரே படியாய் நீங்க; பருமயானையின் நிடர் எலாம்: முகபடாம் அணிந்த யானையின் உடல்கள்—நிடர் நிடராகத் தானே; தேரும் ஈர்த்தன: தேர்களையும் இழுத்துப் போன வண்ணமாக; குடர்எலாம் நிரைத்தன: மக்களுடைய உடல் சின்னா பின்னப்பட்ட காரணத்தால் அவர்களுடைய குடல்கள் நிரை நிரையாக ஒதுங்கச் செய்தன; குருதி ஆறுகள்: ரத்த ஆறுகள். அந்த ஆறுகள் கடைசியாகப் பெரும் பள்ளங்களில் நிறைந்து கடலாகப் பெருகுகின்றன.]

ரத்த ஆறு, கடல் எல்லாம் லக்ஷ்மண மானச உலகில் ஏற்பட்டவைதான். அவனுடைய கண்களுக்கு அப்படியே தோற்றுகின்றன! இன்னும் என்ன தோற்றுகின்றன? ரத்தப் பெருக்கில் பெரிய பேய்களும் சிறிய பேய்களும் கூடித் தலை அற்ற உடல்களுடன் குதித்துக் குதித்து ஆடுகின்றன.

---



"டேய், நீ பரீட்சையில் ரொம்பக் குறைச்சலா மார்க்கு வாங்கி யிருக்காயே! உங்க அப்பாவை என் வீட்டிற்கு வந்து பார்க்கச் சொல்லு."

"ஸார்! தயவு செஞ்சு நீங்களே எங்க வீட்டுக்கு வந்துப் பார்த்துடுங்கோ. எங்கள் அப்பா டாக்டர்; தங்கள் வீட்டிலே வந்து பார்க்கணும்னு அவருக்கு 'விஸிட்டிங் பீஸ்' பத்து ரூபா தரணும்!"

நிவந்தவாள் குருதியின்
நீத்தம் நீந்தி, மெய்
சிவந்தசா தகரொடு
சிறுகண் கூளியும்
கவந்தமும், உலகம்நின்
கைய(து) ஆய(து)! என்(று)
உவந்தன குளிப்பன
காண்டி, உம்பர்போல்.

[நிவந்தவாள் குருதியின் நீத்தம் : உயர்ந்து பெருகி வரும் ரத்தப் பெருக்கு ; மெய் சிவந்த சாதகரொடு : உடம்பு எல்லாம் சிவந்திருக்கும் பெரிய பேய்களோடு ; சிறு கண் கூளியும் : சிறு கண்ணோடு கூடிய குள்ளப் பேய் ; கவந்தமும் : தலை அறுபட்ட உடல்களும் ; உலகம் நின் கையது ஆயது என்று : ராஜ்யம் ராமனுக்கு வந்து விட்டது என்ற உணர்ச்சியோடு : உவந்தன குளிப்பன காண்டி : ஒரே உற்சாகமாக ரத்தக் கிடங்குகளில் கூத்தாட்டம் ஆடுகிறதைப் பார் ; யாரைப்போல் கூத்தாடுகின்றன ? அதோ வானுலகத்தில் தேவர்கள் களிக்கூத்தாடு இருக்களே, தெரிகிறதா ? அவர்களைப் போலத்தான்.]

கோபாக்னியில் தர்க்கம், நியாயம் எல்லாம் துரும்புகள்போல் எரிந்து சாம்பலாய்த்தான் போகும்.

"கைகேசி மேல் அந்தத் தசரதனுக்கு இல்லாத ஒரு காதல். அந்தப் பாழாய்ப் போன காதலால் ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுத்தான். நானும் ஒன்று கொடுக்கத்தான் போகிறேன், இந்த பரதனுக்கு !

ஒருமகன் காதலின்
உலகை நோய்செய்த
பெருமகன் ஏவலின்
பரதன் தான்பெறும்
இருநிலம் ஆள்கைவிட்(டு),—
இன்(று), என் ஏவலால்
அருநர(கு) ஆள்வது
காண்டி ஆழியாய் !''



இன்ஸ்பெக்டர் (பையனைக் கவனிக்காமல்):— இவர் இரண்டு டிக்கட் வாங்க வேண்டுமென்று கட்டாயப்படுத்தினாயா, என்ன ?

[உலகை நோய் செய்த பெருமகன் : உலகத்துக்கு என்றுமில்லாத துன்பத்தைச் செய்த அந்த மகானுபாவன் தசரதன் ; இரு நிலம் ஆள்கை விட்டு : விசாலமான இந்த ராஜ்யத்தை ஆள்கிறதை விட்டு விட்டு ; என் ஏவலால் அருநரகு ஆள்வது காண்டி : தந்தை சொல் கேட்டான் பரதன் ; அப்படியே என்னுடைய கட்டளையையும் கேட்கப் போகிறான் ; அதாவது நரகமாகிற ராஜ்யத்தையும் ஆளப்போகிறான் ; ஆழியாய் : சக்கரவர்த்தியே.]

கடைசியாக மனம் பொறுக்காமல் ஆங்கார மயமாக நின்று சொல்லுகிறான் லக்ஷ்மணன் :

"ராஜ்யத்தைத் துறந்து காட்டை அடையும்படி உனக்கு ஏற்பட்டு விட்டதே என்று உன்னைப் பெற்ற தாய் கோசலை எவ்வளவோ வருந்தினாள். உனக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா ?

வையகம் துறந்துவந்(து),
அடவி வைகுதல்
எய்திய(து) உனக்(கு)என,
நின்னை ஈன்றவள்
நைதல்கண்(டு), — உவந்தவள்
நவையில் ஓங்கிய
கைகயன் மகள், விழுந்(து)
அரற்றக் காண்டியால் !''

[வையகம் துறந்து வந்து அடவி வைகுதல் : ராஜ்யத்தை விட்டுக் காட்டில் வசிக்கும் அவசியம் ; நின்னை ஈன்றவள் துயர் கண்டு : கோசலையின் துயரத்தைக் கண்டு ; உவந்தவள் : சந்தோஷப் பட்டவளாகிய ; நவையில் ஓங்கிய கைகயன் மகள் : பாதகச் செயலில் ரொம்ப ரொம்ப உயர்ந்து போன கைகேசி ; விழுந்து அரற்றக் காண்டியால் : மண்ணில் விழுந்து புலம்புவதைப் பார்.]

ராமனுடைய கண்ணுக்குக் கைகேசி துயரப்படுவதை எடுத்துக் காட்டி விட்டான் லக்ஷ்மணன். இன்னும் என்ன என்ன பேசுவானோ லக்ஷ்மணன் என்ற பயமே உண்டாகி விட்டது. மேலே என்ன நடக்கப் போகிறது என்பதை அடுத்த இதழில் பார்ப்போம்.



# அது ருசிகரமாகவும், திருப்தி அளிக்கக்கூடியதாகவுமிருக்க வேண்டியது . . . ஆனால் அது ஊக்கத்தை அளிக்கவும் வேண்டும்!









ஒவ்வொருவரும் எந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக்புக்" (ஆங்கிலத்தில் மட்டுமே எழுதியுள்ளது) உணவுப் பொருள்களின் தராதரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. உங்களிடம் ஒரு பிரதி இருக்கவேண்டியது அவசியம். Dept. A133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு சமையல் செய்யும்பொழுது எப்பொழுதாவது இதைப் பற்றி யோசிப்பதுண்டா? உணவிற்கு சுவை மாத்திரமிருந்தால் போதாது—அதை உண்பவருக்கு ஊக்கத்தையும் கொடுக்கக்கூடியதாயிருக்கவேண்டும். சில உணவுகள் மற்றவைகளைவிட ஊக்கமளிக்கக் கூடியவை. நாம் வழக்கமாக உட்கொள்ளும் பல ஆகாரங்கள் ஊக்கத்தை யளிக்கக் கூடியவைகளல்ல. அவை நம் ஆரோக்கியத்திற்கு உகந்ததல்ல. உண்மையில் அவைகள் முக்கியமாக குழந்தைகளுக்கு கெடுதல் செய்யவும் கூடும். ஆனால் ஆகாரங்களை ஊக்கமுள்ளவையாகச் செய்வது கடினமில்லை. வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்வது ஒரு வழி. டால்டா இயற்கையாய் ஊக்கமளிக்கக் கூடிய சில முக்கிய வஸ்துக்களை அளிக்கிறது. மேலும் டால்டாவைக் காட்டிலும் உணவுகளுக்கு ருசி அளிக்கும் வஸ்து வேறே கிடையாது. நீங்கள் உபயோகித்துப் பாருங்கள்.

வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.

HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.




# சிறந்ததை விரும்பும் சகலருக்கும்

நறுமணம் கமழும் சிகரெட்டை விரும்புவோர் டி லக்ஸ் டெனாரை வரவேற்பார்கள். சிகரெட்டின் நறுமணத்தின் உயர்நிலையை டெனார் சிகரெட் அடைந்திருக்கிறதென அதை உபயோகிப்பவர்களால் கருதப்படுகிறது. உத்தரவாதமுள்ள 100% பொறுக்கின வர்ஜீனியா புகையிலை இந்த சிகரெட்டுகள் செய்வதில் உபயோகப்படுவதே இதை எல்லாரும் விரும்புவதற்கு முக்கிய காரணம்.

டி லக்ஸ் டெனார் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட்., லண்டன்

**Tenor** is truly a de Luxe Cigarette

JAMES CARLTON LTD. LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA

நகைச்சுவை அரசர்

# திரு N. S. கிருஷ்ணன் அவர்களின்

**மங்கள பால கான சபையாரால்**

## சென்னை ஒற்றைவாடை தியேட்டரில்

## 12 - 11 - 1944 முதல் வெற்றிகரமான

## 4-வது வாரம்!

# இழந்த காதல்

: சமூக சீர்திருத்த நாடகம் :



பாடல்கள் : உடுமலை நாராயணக் கவி

ஓவிய நிபுணர் K. மாதவன் அவர்களால் தயாரிக்கப்பட்ட அற்புத ஸீன்கள், ஆனந்தமான காட்சி — ஜோடனைகள் நிறைந்தது —



சனி, ஞாயிறுகளிலும், கவர்ன்மெண்டு விடுமுறை நாட்களிலும் இலவச டிக்கட்டுகள் செல்லாது

---

டிக்கட் விபரம்: ரூ. 3-0-0, 1-12-0, 1-2-0, 0-9-0, 0-4-6

இதுவரை எந்த கம்பெனியாரும் கையாளாத நவீன முறையில் "டான்ஸ்" பார்க்கத்தக்கது

P. K. பிள்ளை, மானேஜர்.





# ஜம்மியின் லிவர் க்யூருக்கு வந்தனம்

எல்லாவிதமான சிகிச்சையாலும் கைவிடப்பட்ட, முற்றிப்போன ஈரல்குலைப் பெருக்கத்தினின்றும் என் உயிரைக் காப்பாற்றியது

ஈரல் குலைக்கட்டி முதலியவைகளுக்கு இது ஒரு அதி அற்புத நிவாரணி.

எல்லா மருந்து ஷாப்பிலும் கிடைக்கும்.

ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

மயிலாப்பூர் மதராஸ்

சப் ஆபீஸ்: கும்பகோணம்

பிராஞ்சுகள்: பம்பாய், கல்கத்தா, லக்னோ, திருச்சினாப்பள்ளி, பெங்களூர்.





## ஆபரேஷனுக்குப்

பிறகும் அதிர்ச்சிக்குப் பிறகும், விபத்துக்குப் பிறகும் மயிர் உதிர்வதுண்டு. நீடித்த ரோகங்களாலும், பிரஸவத்தாலும், ஜுரங்களாலும் கூந்தல் நஷ்டமடைவதுண்டு. மயிர் விடாமல் உதிர்ந்து வந்தால், கேசத்துக்குப் பதில் அடித் தலையே புலப்படும்.

எந்த காரணத்தால் உதிர்ந்தாலும், கேசவர்த்தினியைக் கொண்டு மயிர் உதிர்வதை நிறுத்துங்கள். இழந்த கூந்தலுக்குப் பதில இளம் புதுக் கூந்தலை வளரச் செய்யுங்கள். இருக்கும் கூந்தலை இழக்காமல் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 12.**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

தென் இந்திய ரஸாயனசாலை.

மயிலாப்பூர்




ஸிம்ப்ஸன்



ஸிம்ஸன் முத்திரையுள்ள க்யாஸ்பிளாண்ட்ஸில் புறப்படச் செய்யுந் தன்மையுள்ளது, தவிர, க்யாஸிலிருந்து பெட்ரோலுக்கோ, க்யாஸும் பெட்ரோலும் சேர்த்து ஓட்டுவதற்கோ, சுலபமாக மாற்றபிரத்தியேகமாய்ச் செய்யப்பட்ட "ஸ்டான்ஸிம்கோ" "க்யாஸ் மிக்ஸிங் சேம்பர்" என்னும் கருவியை உடையது.

க்யாஸ் எவ்வளவு பரிசுத்தமாக இருக்கிறதோ அவ்வளவு மேன்மையான உழைப்பு

**ஸிம்ப்ஸன் & கம்பெனி, லிமிடெட்.**
மவுண்ட்ரோடு, மதறாஸ்.



1840ல் ஸ்தாபித்த ஓர் இந்திய தொழிற் சாலை

இன்றைய சிறந்த முதலீடு, நாஷனல் ஸேவிங்ஸ் ஸர்டிபிகேட்டுகள்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras